# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு— ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளைப் பிஞ்சு மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேணுதவி**

*Johnson & Johnson**



இத்தனையும் கட்டிக்கொண்டு
எப்படி உட்காரப்
-போறீங்க?

பாக்-
இந்தியப்
பேச்சு





ரேஸ்
முடிய-
-வில்லை!

கல்கி

மலர் 34

இதழ் 7



தமிழ்த்திரு நாட்டினைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# வயிற்றுவலி போதாதாம்; தலைவலியும் தேவையாம்!

அத்தியாவசியப் பண்டங்கள் அனைத்தின் விலைவாசிகளும் உச்சாணிக் கொம்பில் ஏறிக் கொண்டிருக்கின்றன. அரிசி விலை, படி மூன்றரை ரூபாயிலிருந்து ஐந்தேகால் ரூபாய்க்கு உயர்ந்து, தற்போது அதுவும் போதாமல் ஆறு ரூபாய், ஏழு ரூபாய் என்று விற்கிறது. இதனாலெல்லாம் வயிற்றைப் பிசைந்து கொண்டு உட்கார்ந்திருக்கும் பாரதக் குடிமகனைப் பார்த்து, 'நெற்றியையும் அழுத்திப் பிடித்துவிட்டுக் கொள்! தலைவலி பிளக்கப் போகிறது!' என்று கூறுகிறது இந்திரா அரசு!

பாரத நாட்டில் இரண்டு விதமான அரசியல் அமைப்புக்களே உண்டு. ஒன்று ராஜ்ய அரசுகள்; மற்றது மத்திய அரசின் நேரடி நிர்வாகத்தில் உள்ள பிரதேசங்கள். இப்போது சிக்கிம்மை உத்தேசித்துப் புதியதோர் அரசியல் அந்தஸ்தை உருவாக்கியுள்ளார்கள்.

எல்லைப்புற நாடான சிக்கிம்மின் பாதுகாப்பும் அயல்நாட்டு விவகாரங்களும் நமது பொறுப்பாகப் பல காலமாகவே இருந்துவருகின்றன. அதன் தொழில், பொருளாதார வளர்ச்சிக்கும் உதவி வருகிறோம். மற்றப்படி அதன் உள்நாட்டு விவகாரங்களில் நமக்கு எவ்விதச் சம்பந்தமும் கிடையாது. முழு சுதந்திர நாடான அது, அண்மையில் முடியாட்சிக்கு முடிவு கட்டி ஜனநாயகம் தழைக்க வழி வகுத்திருக்கிறது.

ஆனால் தற்போது இந்திரா அரசு செய்துள்ள புதிய ஏற்பாட்டின்படி சிக்கிம்முக்கு, 'இந்தியாவுடன் இணைந்த நாடு' என்பதாகப் புதியதோர் அந்தஸ்து வழங்கப்படுகிறது. இந்திய நாடாளுமன்றத்தில் அங்கம் வகிக்கச் சிக்கிம் மக்கள் இரண்டு அங்கத்தினர்களை நேரடித் தேர்தலில் பொறுக்கியெடுத்து அனுப்புவார்கள்.

இதனால் ஏற்படக்கூடிய பின் விளைவுகளை இந்திரா அரசு யோசித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை. நேபாளத்தில் இந்திரா அரசின் இந்தப் போக்குக்கு எதிர்ப்பு ஏற்கனவே கிளம்பிவிட்டது. பூடான் அரசு 'உங்கள் ஆலோசகர்கள் இனி எங்களுக்கு வேண்டாம்' என்று கூறியிருக்கிறது. ஸிக்கிம் மன்னர், 'இந்தியாவின் நல்லெண்ணத்தில் நம்பிக்கை வைப்பதைத் தவிர எனக்கு வேறு ஓர் உபாயமும் தோன்றவில்லை' என்று அழாக் குறையாகப் பேசியிருக்கிறார். அண்டை நாடுகளில் சந்தேகப் பேயை அவிழ்த்து விடுவது ஒருபுறமிருக்க நமது தேசத்திலேயே பிரிவினை பூதங்கள் ஏராளமாய் இருக்கின்றனவே, அவற்றுக்கு டானிக் அளித்ததாக அல்லவா முடிந்தது இந்தக் காரியம்?

நாடாளுமன்றத்தில் தி.மு.க. உறுப்பினர் 'இதே போன்ற அரசியல் அந்தஸ்து மாநில அரசுகளுக்கும் தரப்படுமா?' என்று பட்டவர்த்தனமாகவே கேட்டுவிட்டார். காஷ்மீரத்தின் ஷேக் அப்துல்லா எங்கே எங்கே என்று காத்துக் கொண்டிருக்கிறார்.

இருபத்தேழு ஆண்டுகளில் அரசியல் சட்டத்தில் முப்பத்தாறு திருத்தங்களைச் செய்து உலக ரிகார்ட் ஏற்படுத்தியிருக்கிறது நமது அரசு. எந்த அரசியல் சாம்பியனாலும் இந்த ரிகார்டை முறியடிக்கவே முடியாது!

சிக்கிம்முக்குப் புதிய அந்தஸ்து அளிக்கச் செய்யப்பட்ட முப்பத்தாறாவது திருத்தத்தின் பிறகும்கூட சிக்கிம் பிரதிநிதிகள் தில்லி நாடாளுமன்றத்தில் அங்கம் வகிப்பது அரசியல் சட்டத்துக்கு முரணானதாகவே இருக்கும். ஏனெனில், நமது நாடாளுமன்றத்தில் அங்கம் வகிப்பவர் இந்தியப் பிரஜையாக இருக்க வேண்டும் என்பது அரசியல் சட்டத்தில் முக்கிய நிபந்தனை.

வேண்டாத தலைவலியை வருவித்துக் கொண்டிருக்கும் இந்திரா அரசு தனக்கு ராஜதந்திரம் சிறிதும் இல்லை என்பதை மீண்டும் நிரூபித்துக் கொண்டிருக்கிறது! பரிதாபம்!

# ஆச்சரியமான சேமிப்புக்கு பிஜ்








**பிஜ் கோத்ரெஜ் தயாரிப்பு**

CMGS-60-182 TM



# கல்கி

ஆனந்த ஆவணி 30 — செப்டம்பர் 15, 1974

## இசைவாணியின் திக்விஜயம்

ஸ்ரீ சதாசிவம் — ஸ்ரீமதி எம். எஸ் தம்பதியை வழியனுப்ப விமான நிலையத்துக்கு வந்த லால்குடி ஸ்ரீ ஜெயராமன் சொன்னார்: ''இந்த மக்ஸாய்ஸாய் விருது நாலுவிதத்தில் நமக்குப் பெருமை. இந்தியாவுக்குக் கிடைத்ததில் பெருமை; அதிலும் தமிழகத்துக்குக் கிடைத்ததில் ரொம்பப் பெருமை. சங்கீத உலகுக்குக் கிடைத்ததில் பெருமை; அதிலும் எம். எஸ்ஸுக்குக் கிடைத்ததில் அளவிட முடியாத பெருமை!''

இத்தனை பெருமைகளையும் தாங்கிக் காப்பாற்றிக் கொள்ளும் பெரும் பொறுப்பை ஸ்ரீமதி எம். எஸ் வெகு எளிதில் நிறைவேற்றி விடுவார் என்பது நமக்குத் தெரியும். அவரது சங்கீதச் செல்வம் மட்டுமின்றிச் சுபாவ சம்பத்தும் அதற்குத் துணை நிற்கும் என்ற நம்பிக்கை நமக்கு உண்டல்லவா?

நமது நம்பிக்கை இம்மியளவும் வீண் போகவில்லை என்பதை மணிலாவிலிருந்து பொருளாதார நிபுணர் டாக்டர் எம். எஸ். ஸ்ரீனிவாசன் எழுதியுள்ள கட்டுரை மெய்ப்பிக்கிறது. இவ்விதழில் இடம் பெறும் அக்கட்டுரை பிலிப்பைன்ஸ் நாட்டின் சாமானியப் பிரஜை முதல் ராஷ்டிரபதி வரையில் சகலமான பேரும் அடைந்த மகிழ்ச்சியை விவரிக்கிறது.

சதாசிவம் தம்பதியும் இசைக் குழுவினரும் மணிலாவிலிருந்து புறப்பட்டுப் பல கிழக்காசியத் தலைநகரங்களுக்கு விஜயம் செய்துவிட்டு இம்மாதம் 18ந் தேதி பிற்பகல் ஒரு மணிக்குச் சென்னை மீனம்பாக்கத்தை வந்தடைகிறார்கள். திக்விஜயம் புறப்பட்டுச் சென்றவிடமெல்லாம் நமது சாஸ்திரீய சங்கீதத்தால் அனைவரையும் வெற்றி கொண்டு திரும்பும் எம். எஸ் அவர்களை வாழ்த்தி வரவேற்கிறோம்.

— ஆசிரியர்

# என்ன சேதி?

## உறங்கியது போதும்!

திறமையற்ற நிர்வாகம், தவறான பொருளாதாரக் கொள்கை முதலியவை அரசாங்கத்தில் புரையோடிப் போயிருந்தால் ஆண்டவன்தான் இந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும் எனலாம். ஆனால் நோட்டுக்கள் அச்சாகும் நாஸிக் அச்சக்கூடத்திலேயே திறமையின்மையும் அசிரத்தையும் ஒருவேளை நில்லுமூலையும்கூடப் புகுந்துவிட்டதென்றால் பிறகு ஆண்டவனால்கூட இந்த நாட்டைக் காப்பாற்ற முடியுமா என்பது சந்தேகம்தான்.

ஒரே எண்களுள்ள ஐந்து ரூபாய் நோட்டுக்களை ராஜ்கோட்டிலுள்ள சௌராஷ்டிரா ஸ்டேட் பாங்க் வழங்கியதாக ஒருமுறை செய்தி வந்தால் ஏதோ தவறு நேர்ந்திருக்கும் என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ளலாம். ஆனால் இதே போன்ற செய்தி அடுத்தடுத்து மூன்று நாட்களில் நாளிதழ்களில் இடம் பெறும்போது 'ஐயோ! நமது தேசம் இவ்வளவு மட்டமான நிலைக்குத் தாழ்ந்து விட்டதே!' என்ற விசனமும் கவலையும் நெஞ்சைக் கவ்வுகின்றன.

நோட்டுக்கள் அச்சடிப்பது என்பது எவ்வளவு கருத்துடன் நிறைவேற்றப்பட வேண்டிய பொறுப்புள்ள காரியம்? அதில் இம்மாதிரி தவறுகளையோ அல்லது தகிடுதத்தங்களையோ அனுமதித்தால் மக்களுக்கு அரசிடம் என்ன மதிப்பு இருக்கும்? அயல்நாட்டவருக்குத்தான் நமது நாணயத்தின் மீது சந்தேகம் விழுந்து விடாதா?

நிதி அமைச்சர் விழித்துக் கொள்ளட்டும். சோஷலிஸத் தாலாட்டில் உறங்கியது போதும், ஐயா! போதும்!

## திருமலையில் ஷூட்டிங்!

காஷ்மீரம் முதல் கன்யாகுமரி வரை உள்ள பக்தகோடிகளைக் கவர்ந்திழுத்துக் காணிக்கை பெற்று லட்சம் லட்சமாகத் தேவஸ்தானத்துக்குத் தருகிறார் ஏழுமலையாண்டவன். தேவஸ்தான நிர்வாகிகளுக்கு அதுவும் போதவில்லை!

வேங்கடாசலபதி பெயரைச் சொல்லி எப்படியெல்லாம் பணம் பண்ணலாம் என்று பார்த்துக் காரியத்தில் இறங்குகிறார்கள்.

அபிஷேக தீர்த்தத்தைச் சீசாவில் அடைத்து விற்கப் போகிறார்களாம். லட்டுப் பிரசாதத்தை பிளாஸ்டிக் உறையிலிட்டு விமான நிலையங்களில் காட்சிப் பொருளாக்கி விற்கப்போகிறார்களாம்! ரோப்வே அமைத்து அதில் தொங்கியபடி நகரும் நாற்காலிகளில் பக்தர்கள் அமர்ந்து மலைக்கு மலை பயணம் செய்ய அனுமதிப்பார்களாம்! போதாக் குறைக்கு நாளைக்கு ஆயிரம் ரூபாய், அது தவிர ஓர் ஆயிரம் ரூபாய் என்று பெற்றுக் கொண்டு திருப்பதியில் சினிமா ஷூட்டிங் நடத்த அனுமதிப்பார்களாம்!

திருமலை—திருப்பதியின் தெய்வீகச் சூழலைக் குட்டிச்சுவராக்கி உல்லாச கேளிக்கைபுரியாக்கி விடக் கங்கணம் கட்டிக் கொண்டு காரியம் செய்கிறார்கள் போலும்!

திருமலையப்பனை இப்படி வியாபாரப் பொருளாக்குபவர்களின் அடுத்த திட்டம் விவித பாரதி விளம்பரமாகத்தான் இருக்கும்: "நாவுக்கு இனிமை! மனத்துக்குக் குளுமை! ஆன்மாவுக்கு வலிமை! வாங்குங்கள் திருப்பதி வேங்கடாசலபதி மார்க் லட்டுகளை! தரம் மிக்க லட்டுகள் எல்லா விமான தளங்களிலும் கிடைக்கும்! இன்றே ருசித்துப் பாருங்கள்!"

## புதிய கட்சி

பாரதீய லோக் தாள் தோன்றியிருக்கிறது. சில்லறைக் கட்சிகள் பல இணைந்து, ஆளும் கட்சிக்கு ஒருமுகமான எதிர்ப்புத் தெரிவிப்பது வரவேற்கத் தக்கது. ஸ்தாபன காங்கிரஸ், ஜனசங்கம் ஆகியன இதில் இணையாது போனாலும் குறைந்தபட்சம் பொருளாதார அம்சத்திலாவது ஒத்துப் போக வேண்டும். ஏழ்மையை வளர்த்து மக்களை அடிமைப்படுத்தி வருத்தும் சோஷலிஸ சித்தாந்தத்துக்கு நேர்மாறான மாற்றுத் திட்டத்தை மக்கள் மன்றத்தில் அவர்கள் சமர்ப்பித்து ஒப்புதல் பெற வேண்டும். நாட்டையும் மக்களையும் காப்பாற்ற இது ஒன்றே வழி.

ராஜாஜி சிந்தனை

### உழைப்பே பூஜை!

நாம் எப்படி வாழ வேண்டும் என்று உபநிஷதம் கூறுகிறது:

"இவையெல்லாம் ஆண்டவனே; இந்த உலகில் இருப்பன எல்லாம் அவனுடையதே. உனக்குக் கொடுக்கப்பட்டுள்ளதை ஆனந்தமாக அனுபவி. மற்றவரிடம் இருப்பனவற்றுக்கு ஆசைப்படாதே."

"எத்தனை காலம் நீ வாழ முடியுமோ அத்தனை காலம் உழைத்தபடியே வாழ்ந்திரு. உழைப்பது தவிர வாழ்வதற்கு வேறு மார்க்கம் இல்லை. உழைப்பினால் கிடைக்கும் லாபத்தில் பற்றுதல் கொள்ளாமல் உழைப்பாயாக."

வாழ்வைத் துறக்குமாறு உபநிஷதம் கூறவில்லை. உழைக்காமல் வாழ்வது சாத்தியமில்லை என்கிறது. எல்லோரும் உழைக்க வேண்டும். அதில் பற்று வைத்துப் பேராசையை வளர்த்துக் கொள்ளாதவரை உழைப்பதில் தவறில்லை. பற்றுதலும் பேராசையுமே பயத்தையும் வெறுப்பையும் வளர்ப்பவை. ஆன்மாவை இழப்பதற்கும் இருள் நம்மைச் சூழ்வதற்கும் அவையே காரணம். பற்றுதல் இல்லாத உழைப்பு சரியானது. அதுவே பூஜைதான்.

சுயராஜ்யா, டிசம்பர் 16, 1961

# நீல முகப்பு
# 955




உழைப்பு
சக்தி
பாதுகாப்பு



## எவரெடி 955
## அதன் விலைக்கு சிறந்த மதிப்பு அளிக்கிறது

**உழைப்பு**—சக்தி வீணாகிப்போவதில்லை. ஆதலால், நல்ல நீடித்த உழைப்பிற்கான கூடுதல் சக்தியைப் பெறுகிறீர்கள்.

**சக்தி**—விசேஷ உலோகத்தாலான அடிப்பாகம் பாட்டரிக்குப் பாட்டரி இடைவிடாத தொடர்பை நிச்சயப் படுத்தி அதனால் உண்டாகும் சக்தியனைத்தையும் வழங்குகின்றது.

**பாதுகாப்பு**—ஒன்றின் மேல் ஒன்றுள்ள தடிப்பான ஜாக்கெட் ஒழுகிச் செல்வதைத் தவிர்க்கின்றது—உங்கள் டார்ச்சையும் பாதுகாக்கின்றது.

UC 7964

# எவரெடி
**-உன்னதமானவைகளில் முதன்மையானது**

# ஒரு 90-விநாடிக் கண்ணோட்டம்- டிவிஎஸ் அளிக்கும் முழுமையான சேவை

டிவிஎஸ் ஒரு புதிய
டிரக்கை உங்களுக்கு
விற்பனை செய்கிறது.



அதன் முதலீட்டில் 70 சதவிகிதம் அல்லது
அதற்கு மேலும் பெற வழி செய்கிறது.



அதன் பாடியைக் கட்டித்
தருகிறது.



அதற்கான பராமரிப்பு சேவையை
அளிக்கிறது.



டயர்களை ரீடிரெட் செய்கிறது.



உங்கள் நம்பிக்கைக்கு
உரியது டிவிஎஸ்




அசல் மாற்றுப் பகுதிகள் பல டிவிஎஸ்
அலுவலகங்களிலும்,
ஏராளமான விற்பனை/பணி
நிலையங்களிலும் கிடைக்கின்றன.

டி.வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் சன்ஸ்
பிரைவேட் லிமிடெட், மதுரை.

SAA:TVS/1036

# சிவத்தின் சக்தி நாராயண சகோதரி

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

நர, நாராயணர்கள் என்பதாக மகா விஷ்ணு இரட்டை அவதாரம் செய்தார். இவர்கள் தபஸ் செய்தபோது தபஸைக் கலைக்க தேவலோக அப்ஸரஸ்கள் வந்தார்கள். அப்போது நரனுக்கு மகாகோபம் வந்தது. பகவானின் அம்சமாயினும் 'நரன்' என்ற பேருக்கு ஏற்றபடி இவருக்கு மனுஷ்ய சுபாவத்தின்படி கோபம் வந்து விட்டது. ''ஹூம்'' என்று ஓர் உறுமல் உறுமினார். அந்த ஹூங்காரத்தினால் எங்கே பஸ்மமாகி விடுவோமோ என்று பயந்து அப்ஸரஸ்கள் நாராயணர் தபஸ் செய்கிற இடத்துக்கு ஓடி வந்தார்கள். இங்கே வந்து தங்கள் சாமர்த்தியத்தைக் காட்ட ஆரம்பித்தார்கள். நாராயணருக்கோ கொஞ்சம் கூடக் காமமே கிடையாது. அது மட்டுமில்லை. நரர் மாதிரி இவருக்குக் கோபமும் கிடையாது. எனவே சிரித்துக்கொண்டே விளையாட்டாகத் தமது தொடையைத் தட்டினார். நாராயணரின் தொடையிலிருந்தே ஊர்வசி(ஊரு—தொடை) தோன்றினாள். அவள் அழகைக் கண்டு தேவலோக நாட்டிய ஸ்திரீகள் வெட்கி, 'இவரிடம் நம் சக்தி பலிக்காது' என்று உணர்ந்தார்கள். அப்ஸரஸ்களும் வெட்கும் படியான அத்தனை அழகைத் தமக்குள் வைத்துக் கொண்டே அவர் பரம பரிசுத்தமான தபஸ்வியாக இருந்திருக்கிறார்! அவரையே ஆதாரமாகக் கொண்டு, அவரிடமிருந்தே பிறக்கிற அழகு தன் கைவரிசையை அவரிடமே காட்ட முடியுமா? இதுதான் தாத்பரியம்.

அதே மாதிரி, பிரம்மாவும், மன்மதனும் விஷ்ணுவிடமிருந்து வந்ததாலேயே அவர் ஜன்மத்தை, காமத்தைப் போக்குகிற சக்தி படைத்தவராக இருக்கிறார்.

நாராயண சகோதரியான அம்பாள் எரிந்து போன காமனுக்குப் புனர்ஜன்மா கொடுத்து அவனைப் படைத்தாள். அவளே சிவனின் சக்தியாகக் காமனைப் போக்குகிறாள். காமாக்ஷியை உபாசித்தவர்கள் காம ஜயம் செய்கிறார்கள்.

நாம் ஏதாவது கெடுதல் வந்தால் ''சிவசிவா'' என்கிறோம். கேட்கக் கூடாததைக் கேட்டால் ''சிவசிவா'' என்று காதைப் பொத்திக் கொள்கிறோம். மூகரோ, ரொம்பவும் நல்லதாக இருக்கிற ஓர் அதிசயத்தைப் பார்த்து, ''ஆஹா ஆஹா'' என்று சொல்வதற்குப் பதில் ''சிவசிவ'' என்கிறார்.

**சிவசிவ பச்யந்தி ஸமம்**
**ஸ்ரீகாமாக்ஷீ கடாக்ஷிதா: புருஷா:**

''ஸ்ரீகாமாக்ஷியம்பாளின் கடாக்ஷத்தைப் பெற்றவர்கள் விஷயமாக எத்தனை அதிசயங்கள் நடந்து விடுகின்றன! சிவசிவ'' என்கிறார். 'அவர்களுக்கு எல்லாம் சமமாகத் தெரிகிறதே!' என்று வியக்கிறார்.

சமத்துவம், சமத்துவம் என்று இந்தக் காலத்தில் வாய்ப்பேச்சில் நிறையச் சொல்கிறோம். ஆனால் ஞானமில்லாமல், வெறும் பாலிடிக்ஸாகச் சொல்கிறோம். காரியத்தில் இது முக்கால்வாசி பொய்யாகவே இருக்கிறது.

காமாக்ஷியின் கடாக்ஷம் பெற்றவனுக்கோ அத்வைத ஞானமே சித்தித்து விடுகிறது. அவனுக்குப் பார்ப்பதெல்லாம் ஒரே பரம் பொருள்தான். சத்தியமான சம தரிசனம் அவனுக்குத்தான் இருக்கிறது.

அவனுக்குக் காடும் வீடும் சமமாகி விட்டது என்கிறார் மூகர்.

அவனுக்குக் குரோதம் என்பது கொஞ்சம் கூட இல்லை. எனவே மித்திரனும் சத்ருவும் சமமாகி விட்டார்களாம்!

காமமும் அவனை விட்டு அடியோடு அகன்று விட்டது. யுவதியின் சிவந்த உதடும், மண்ணாங்கட்டியும் அவனுக்குச் சமமாகி விட்டன என்கிறார் மூகர்.

**லோஷ்டம் ச யுவதி பிம்போஷ்டம்**

என்று பிராஸம் போட்டு அழகோடு சொல்கிறார். கீதையில் பகவான், ''யோகீ ஸம லோஷ்டாச்ம காஞ்சன'' என்று சொன்னதை நினைப்பூட்டுகிற மாதிரியே மூகரும் சொல்கிறார். பொன்னாசையை வைத்து 'பொன்னும் மண்ணும் யோகிக்குச் சமம்' என்றார் பகவான். மூகர் பெண்ணாசையை வைத்துப் பேசுகிறார். லோஷ்டம் — மண்ணாங்கட்டி; ஓஷ்டம் — உதடு. (உதடு பெரிதாகத் தொங்கிக் கொண்டிருக்கிற பிராணிதான் ஒஷ்ட்ரம்; இதுவே தமிழில் ஒட்டை, ஒட்டகம்.)

எத்தனை காமம், குரோதம், சோகம், பயம் இவற்றை உண்டுபண்ணுகிற வஸ்துவும் அம்பாளை உபாசிக்கிறவனைக் கொஞ்சம் கூட அசைக்காது.

காம குரோதாதிகள் இல்லாமல் எப்போது பார்த்தாலும் அவளையே தியானித்துக் கொண்டிருந்தால் அதுவே தான் மோக்ஷம். 'அவள் வேறு நான் வேறு' என்கிற பாவனையும் போய், அவளே நாமாக முடிகிற அந்த நிலையே மோக்ஷம்.

ஆரம்ப நிலையில் அவளுடைய சரணாரவிந்தங்களையே கெட்டியாகப் பிடித்துக் கொண்டு அவளைப் பிரார்த்தித்தபடி இருக்க வேண்டும்; கொஞ்சம் கொஞ்சமாக நம்மை அவளிலேயே கரைக்க வேண்டும்.

நாம் கொஞ்சம் பிரயாசைப்பட்டாலும் போதும். அவளே நம்மைக் கொஞ்சம் கொஞ்சமாக உயர்த்தி ரக்ஷிப்பாள். அழுகிற குழந்தைக்கு அம்மா பால் தருகிற மாதிரி நமக்கு ஞானப்பால் ஊட்டுவாள். இம்மைக்கும் மறுமைக்கும் அவளே நமக்குக் கதி.

# மாயாஜால வித்தை இல்லை!




# உங்கள் மூலதனம் இரு மடங்கிற்கு மேல் ஆக நாங்கள் உதவுகின்றோம்

*எமது ஓய்வுகால திட்டக் கணக்கின் கீழ்*

| நீங்கள் மாதம் செலுத்துவது ரூ. | மாதங்கள் | மாதம் திருப்பி பெறுவது ரூ. |
|---|---|---|
| 100 | 84 | 201 |
| 100 | 120 | 272 |

நீங்கள் மாதம் ரூ. 10/- முதல் ரூ. 1000/- வரை டெபாசிட் செய்யலாம். 61 மாதங்கள் டெபாசிட் செய்யும் திட்டமும் எம்மிடம் உண்டு.

இந்தியன் பாங்க் மிக அதிக வட்டி அளிக்கிறது. உங்கள் குழந்தைகளின் கல்விக்காகவோ அல்லது உங்களது ஓய்வு காலத்திற்காகவோ நீங்கள் சேமிக்க வேண்டிய தருணமிது.

## இந்தியன் பாங்கில் சேமியுங்கள்




**இந்தியன் பாங்க்**
(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)
தலைமை அலுவலகம்,
17 வடக்கு கடற்கரை சாலை,
சென்னை-600 001

# சிவகாமியின் சபதம்

### பதினேராம் அத்தியாயம்

## வரவேற்பு

**அ**ன்றிரவு வெகு நேரத்துக்குப் பிறகு அந்தப்புரத்தில் மகேந்திர பல்லவர் தம் பட்டமகிஷியைச் சந்தித்தபோது, புவனமகாதேவி தனது மனக் கவலையைத் தெரிவித்தாள். ''பிரபு! இன்றைக்கு மந்திராலோசனைச் சபையில் தங்களுக்கும் மாமல்லனுக்கும் பெரிய வாக்குவாதம் நடந்ததாமே! நாலு பேருக்கு முன்னால் தந்தையும் புதல்வரும் சண்டை போட்டுக் கொள்ளலாமா?'' என்று சக்கரவர்த்தினி கேட்டாள்.

''தேவி! யார் என்ன வேணுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். எனக்கு இன்றைக்கு இருக்கிற பெருமையையும் பூரிப்பையும் சொல்லி முடியாது. அர்ஜுனனும் அபிமன்யுவும் லக்ஷ்மணனும் இந்திரஜித்தும் பேசுவதற்குரிய வீர வார்த்தைகளை இன்று மாமல்லன் பேசினான். உள்ளுக்குள் எவ்வளவோ எனக்கு ஆனந்தமாயிருந்தது. ஆனாலும் என்னுடைய நோக்கத்தை நான் கைவிடுவதற்கு இல்லை. ஆகையால், என்னுடைய ஆனந்தத்தை வெளியே காட்டாமல் கடுமையாகவும், கண்டிப்பாகவும் பேச நேர்ந்தது'' என்றார் சக்கரவர்த்தி.

''உங்களுடைய நோக்கந்தான் என்ன? தாங்கள் செய்யப் போகும் காரியம் எனக்கும் பிடிக்கவில்லை. நம்முடைய கொடிய சத்துருவைக் காஞ்சி நகருக்குள் வரவேற்பது உசிதமான காரியமா?'' என்றாள் பல்லவ சக்கரவர்த்தினி.

அமரர்

**கல்கி**



''தேவி! இது என்ன வார்த்தை? சத்துருவாக வந்தவரை மித்திரராக்கித் திருப்பியனுப்புவது பல்லவ வம்சத்துக்குப் பெருமை அல்லவா? என்னுடைய நோக்கம் என்னவென்று கேட்டாயே? சொல்கிறேன், கேள்: என்னுடைய வாழ்நாளில் உலகத்தில் மீண்டும் சத்திய யுகம் பிறப்பதைக் காண வேண்டும் என்பதே எனது நோக்கம். இந்தப் புண்ணிய பாரத பூமியில் இன்றைய தினம் மூன்று பெரிய சாம்ராஜ்யங்கள் இருக்கின்றன. நர்மதைக்கு வடக்கே ஹர்ஷவர்த்தனர்; நர்மதைக்கும் துங்கபத்ராவுக்கும் மத்தியில் புலிகேசி; துங்கபத்ரைக்குத் தெற்கே மகேந்திர பல்லவன். இந்த மூன்று பேரும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கும் பட்சத்தில் இந்தப் புண்ணிய பூமி நரக பூமியாயிருக்கும். பஞ்சமும் பிணியும் ஜனங்களைப் பிடுங்கித் தின்னும். அப்படியில்லாமல் இந்த மூன்று பேரும் சிநேக தர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்களாயிருந்தால், இந்தப் பாரத பூமியே சொர்க்க பூமியாகிவிடும். தேசத்தில் வறுமை, பட்டினி, பஞ்சம் ஒன்றும் தலைகாட்டாது. கல்வியும் கலைகளும் ஓங்கி வளரும். சகல ஜனங்களும் சௌக்கியமாக வாழ்வார்கள். தேவி! என் இளம் பிராயத்தில் நான் ஒரு பகற் கனவு காண்பது உண்டு. சளுக்க சக்கரவர்த்தியின் விருந்தினனாக நான் சென்று அஜந்தாவின் வர்ணச் சித்திர அதிசயங்களைக் கண்டு களிப்பதாகக் கனவு கண்டேன். அப்புறம் வடக்கே கன்யா குப்ஜத்துக்குச் சென்று ஹர்ஷவர்த்தனர் மூன்று வருஷங்களுக்கு ஒரு தடவை நடத்தும் ஆனந்தக் கலை விழாவைப் பார்த்து மகிழ்வதாகக் கனவு கண்டேன். மாமல்லபுரத்தை ஒரு சொப்பனச் சிற்ப உலகமாகச் சிருஷ்டித்து அதைப் பார்ப்பதற்காக ஹர்ஷரையும் புலிகேசியையும் அழைப்பதாகக் கனவு கண்டேன். அதெல்லாம் இப்போது நிறைவேறுமெனத் தோன்றுகிறது. நாங்கள் மூவரும் சிநேகிதர்களாகிவிட்டால் அப்புறம் இந்த நாட்டில் சமயச் சண்டை என்பது ஏது? யுத்தந்தான் ஏது?''

''பிரபு! அன்பு மதத்தையும் சிநேக தர்மத்தையும் பற்றிப் பேசும் தாங்கள் பாண்டியனைத் தண்டிப்பதற்கு மாமல்லனை எதற்காக ஏவுகிறீர்கள்?'' என்று

சக்கரவர்த்தினி குறுக்கிட்டுக் கேட்டாள்.

"அது வேறு விஷயம். சிநேகம் என்பது சம நிலையில் உள்ளவர்களுக்கிடையேதான் ஏற்பட முடியும். அறிவாளிகளுக்குள்ளேதான் அன்பு வளர முடியும். அறிவற்ற மூடர்களையும் அதிகப் பிரசங்கிகளையும் தண்டோபாயத்தைக் கைக்கொண்டே சீர்திருத்தியாக வேண்டும்" என்று கூறினார் மகேந்திர பல்லவர்.

மறு நாள் முதல் காஞ்சி நகரம் ஒரு புதிய தோற்றத்தை மேற்கொண்டது. ஏதோ ஒரு பெரிய முக்கியமான திருவிழாவை எதிர்பார்ப்பது போல் ஜனங்களிடையே அபரிமிதமான உற்சாகம் காணப்பட்டது. வீதிகளையும் வீடு வாசல்களையும் ஜனங்கள் சிங்காரிக்கத் தொடங்கினார்கள். கடை வீதிகள் பழையபடி சோபை பெற்று விளங்கின. கோயில்களில் உத்சவங்கள் ஆரம்பமாயின. சிற்ப மண்டபங்களில் பழையபடி சிற்பிகள் வேலை செய்யத் தொடங்கினார்கள். நாற்புறமும் மேள வாத்தியங்கள் முழங்கின. சம்ஸ்கிருத கடிகைகளில் முன்போல் வேதகோஷங்கள் கேட்டன. தமிழ்க் கல்லூரிகளில் பாசுரங்கள் பாடப்பட்டன. நடன அரங்கங்களும் நாடக மேடைகளும் புத்துயிர் பெற்றன. தாளச் சத்தத்துடன் கலந்து பாதச்சதங்கையொலியும் எழுந்தன.

ஜனங்களின் முக மலர்ச்சியோ சொல்ல வேண்டியதில்லை. எல்லோரும் ஒரே ஆனந்தமாகக் காணப்பட்டார்கள். புருஷர்களும் ஸ்திரீகளும் முன்போல் ஆடை ஆபரணங்களால் தங்களை அலங்கரித்துக் கொள்ளத் தொடங்கினார்கள். பெண்களின் கூந்தலில் புஷ்பக் காடுகள் மலர்ந்து நாற்புறமும் சுகந்தத்தைப் பரப்பின.

மாமல்லர் எதிர்பார்த்ததுபோல் காஞ்சி நகர மக்கள் அதிருப்தி அடைந்தவர்களாகத் தெரியவில்லை. யுத்தம் நின்றுவிட்டதில் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தவர்களாகவே காணப்பட்டார்கள். அதைக் காட்டிலும், சளுக்க சக்கரவர்த்தி காஞ்சிக்கு விஜயம் செய்யப் போவதை நினைத்து நகரவாசிகள் அபரிமிதமான களிப்படைந்தவர்களாகத் தோன்றினார்கள்.

*       *       *

புலிகேசியின் சமாதானத் தூதன் வந்த ஐந்தாவது நாள் பிற்பகலில், காஞ்சி நகரின் வடக்குக் கோட்டை வாசல் எட்டு மாதங்களுக்குப் பிறகு மீண்டும் திறந்தது. பேரிகைகளும், நகராக்களும், சமுத்திர கோஷம், கடுமுகம் என்னும் வாத்தியங்களும் நெடுந்தூரத்துக்கு நெடுந் தூரம் உள்ளவர்களின் காது செவிடுபடும்படி முழங்கின. வாதாபிச் சக்கரவர்த்தி, தாம் இளம் பிராயத்திலிருந்து பார்க்க ஆசைப்பட்டுக் கொண்டிருந்த 'கல்வியிற் பெரிய காஞ்சி'மா நகரத்துக்குள் பிர





வேசம் செய்தார். அவருடைய முக்கியமான பரிவாரத்தைச் சேர்ந்த ஐம்பது பேர் அவருடனே வந்தார்கள்.

வெளி வாசலைத் தாண்டி உள்ளே பிரவேசித்ததும், அங்கே தம்மை வரவேற்பதற்கு ஆயத்தமாகக் காத்துக் கொண்டிருந்த மகேந்திர பல்லவ சக்கரவர்த்தியைப் புலிகேசி பார்த்தார். அவ்விரண்டு பேரரசர்களின் கண்களும் சந்தித்தன. மகேந்திரரின் முகத்தில் அரும்பியிருந்த இளம் புன்னகையைத் தவிர வேறு எவ்வித உணர்ச்சியும் வெளியாகவில்லை. ஆனால் புலிகேசியின் முகமானது அவருடைய கொதிப்படைந்த உள்ளத்தின் கொந்தளிப்பை நன்கு காட்டுவதாயிருந்தது. "என்னுடைய வம்ச சத்துரு, நான் போட்டுக் கொண்டு வந்த திட்டங்களையெல்லாம் தோல்வியடையச் செய்த மகேந்திர பல்லவன் இவன்தானா!" என்று புலிகேசியின் உள்ளத்தில் உண்டான ஆத்



திரத்தை அவருடைய கண்கள் பிரதிபலித்தன. இந்த எண்ணங்களோடு, "ஆகா! கள்ளங் கபடு அறியாதது போலப் பாவனை செய்யும் இந்தக் கம்பீரமான முகத்தை இதற்கு முன் எங்கேயோ பார்த்தாற்போல் இருக்கிறதே!" என்ற நினைவும் புலிகேசியின் மனத்தில் தோன்றியது.

இரு சக்கரவர்த்திகளின் விருதுகளும் முறையே கூறப்பட்ட பிறகு, இருவரும் அவரவர்களுடைய குதிரைகளிலிருந்து கீழே இறங்கி ஒருவரையொருவர் ஆலிங்கனம் செய்துகொண்டார்கள். அதே சமயத்தில் புலிகேசியின் கண்கள் மகேந்திர பல்லவருக்குப் பின்னால் நின்ற பரிவாரங்களைத் துருவி ஆராய்ந்தன. "சத்யாச்ரயா! யாரைத் தேடுகிறீர்கள்?" என்று மகேந்திர பல்லவர் கேட்க, "பல்லவேந்திரா! தங்களுடைய வீரப் புதல்வர் மாமல்லரைப் பற்றி எவ்வளவோ கேள்விப் பட்டிருக்கிறேன். அந்த மகா வீரர், இங்கு நிற்பவர்களில் யாரோ?" என்று சளுக்கச் சக்கரவர்த்தி கேட்டார்.

மகேந்திர பல்லவர் அப்போது இலேசாகச் சிரித்து விட்டு, "இல்லை, சத்யாச்ரயா! மாமல்லன் இங்கே இல்லை. அவன் வேறு முக்கிய காரியமாக வெளியூருக்குச் சென்றிருக்கிறான்" என்றார்.

### பன்னிரண்டாம் அத்தியாயம்

## மூன்று உள்ளங்கள்

காஞ்சிமா நகரின் வடக்குக் கோட்டை வாசல் வழியாக வாதாபிச் சக்கரவர்த்தி அந்த நகருக்குள் பிரவேசித்துக் கொண்டிருந்தபோது, தெற்குக் கோட்டை வாசல் வழியாகக் குமார சக்கரவர்த்தி வெளியேறிக் கொண்டிருந்தார்.

அவருக்கு முன்னால் முப்பதினாயிரம் பல்லவ வீரர்கள் அடங்கிய காலாட் படையும், ஐயாயிரம் போர்க் குதிரைகளும், நூறு போர் யானைகளும், மற்றும் சேனைப் பரிவாரங்களும் நகரிலிருந்து வெளியேறிக் கோட்டைக்குச் சற்றுத் தூரத்தில் அணிவகுத்துப் பிரயாணத்துக்கு ஆயத்தமாக நின்றன.

இடிந்து தகர்ந்து பாதி தூர்ந்துபோயிருந்த அகழியின் மேல் அவசரமாக அமைத்த பாலத்தின்மீது கண்ணபிரான் ஓட்டிய ரதம் விரைந்து சென்றபோது அதன் சக்கரங்கள் கடகட சடசட வென்று சத்தம் செய்தன.

ரதத்தில் மாமல்லரும் பரஞ்சோதியும் வீற்றிருந்தார்கள்.

அகழிப் பாலத்தை ரதம் கடந்து, அக்கரை சென்றதும், பாலம் அகற்றப்பட்டது. உடனே கோட்டை வாசல் கதவுகள் தடார் தடார் என்று சாத்தப்பட்டன. அக்கதவுகளின் தாழ்களைப் போடும் 'லொடக்' 'லொடக்' என்ற சத்தமும், பூட்டுக்கள் பூட்டப்படும் 'டடக்' 'டடக்' என்ற சத்தமும் ரதச் சக்கரங்களின் 'கடகட சடசட' என்ற சத்தத்துடன் கலந்து கொண்டன.

அச்சமயம் அந்த ரதத்தில் வீற்றிருந்த மூன்று பேரின் இருதயங்களும் கூடப் 'படக்' 'படக்' என்று அடித்துக் கொண்டிருந்தன.

* * *

மாமல்லர் புறப்படுவதற்கு முன்னால் தமது அன்னை புவன மகாதேவியிடம்

லுங்கி அணிவது நாகரீகம்
அதில் ஆணும் பெண்ணும் சரிசமம்




REGD. TRADE MARK

பளயகாட்ஸ்

# சங்கு மார்க்

## லுங்கிகள்

## கைகுட்டைகள்

தயாரிப்பாளர்கள் :

மதராஸ் பளயகாட் கம்பெனி பிரைவேட் லிட்.

31, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1

கிளை. 57, ரவீந்திர சாரணி, கல்கத்தா-1

CHARI.

SISTA'S-DIL-349 TAM

அழகு முகம்
ஒவ்வொன்றுக்குள்ளும்
அழகு ரகசியம்
ஒன்று
ஒளிந்திருக்கிறது.




உங்கள்
நோக்கம்
அழகாகத் தோற்ற
மளிப்பது. உங்கள்
சருமத்தை
அதற்கேற்ப
வைத்திருப்பது
க்ருக்ஸ் லாக்டோ-
காலமைன்.

க்ருக்ஸ்
லாக்டோ-காலமைன்

டு.பாச்-இண்டர்.:ப்ரான் லிட்.,
தபால் பெட்டி எண் 6582,
பம்பாய் 400 018

அதுவே எழில் பராமரிப்பு ரகசியம்.

விடைபெற்றுக் கொள்வதற்காகச் சென்றார். அப்போது அந்த வீர மாதரசியின் கண்கள் கலங்கியிருந்தன. அவளுடைய உள்ளமும் கலக்கம் அடைந்திருந்ததாகத் தோன்றியது. துர்விநீதனைத் தண்டிப்பதற்காகப் புள்ளலூர்ப் போர்க்களத்துக்கு மாமல்லர் புறப்பட்டபோது புவனமகாதேவி இத்தகைய மனக் கலக்கத்தைக் காட்டவில்லை. அச்சமயம் முக மலர்ச்சியுடனும், பெருமிதத்துடனும் வீர மகனை ஆசீர்வதித்து வாழ்த்தி அனுப்பினாள்.

''அம்மா! இது என்ன, ஏன் கலங்குகிறீர்கள்? போர்க்களம் எனக்குப் புதியதா? யுத்தந்தான் புதியதா?'' என்று மாமல்லர் கேட்டதற்குச் சக்கரவர்த்தினி, ''குழந்தாய்! அதைக் குறித்தெல்லாம் நான் கவலைப்படவில்லை. உன்னுடைய தந்தையின் காரியம்தான் என்னை வருத்துகிறது. தசரதர் செய்ததைக் காட்டிலும் கொடுமையான காரியத்தை உன் தந்தை செய்கிறார். தசரதர் இராமனைக் காட்டுக்கு அனுப்புவதோடு நின்றார். உன் தந்தையோ இராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டு அதே சமயத்தில் இராவணனையும் விருந்தாளியாக வரவேற்கப் போகிறார்!'' என்றாள்.



இதைக் கேட்ட மாமல்லரின் முகத்தில் சென்ற சில காலமாகக் காணப்படாத குறுநகை மலர்ந்தது.

''தாயே! நான் இராமன் அல்ல. இராமனாயிருந்தால், சீதையையும் கூட்டிக்கொண்டல்லவா காட்டுக்குப் போக வேண்டும்? என் தந்தையும் தசரதர் இல்லை. ஏனென்றால் கைகேயி வார்த்தையைக் கேட்டுக் கொண்டு அவர் என்னை வனத்துக்கு அனுப்பவில்லை. புலிகேசியோ நிச்சயமாக இராவணன் இல்லை. இராவணன் சுத்த வீரன், அம்மா! போர்க்களத்தில் சகலமும் போய்த் தன்னந்தனியாக நின்றபோதும் சரணாகதி அடைய மறுத்து உயிரை விட்டான். அந்த மகா வீரன் எங்கே? இந்தக் கோழைப் புலிகேசி எங்கே? நூறு காத தூரம் படையெடுத்து வந்து விட்டு யுத்தம் செய்யாமலே அல்லவா இவன் திரும்பிப் போகப் போகிறான்?'' என்றார் மாமல்லர்.

''குமாரா! நீ என்னதான் சொன்னாலும் மொத்தத்தில் என் மனத்தில் அமைதி இல்லை. பல்லவ குலத்தின் தீரா விரோதியுடன் உன் தந்தை சிநேகம் கொண்டாடுவது எனக்குப் பிடிக்கவில்லை; இந்தச் சமயத்தில் நீ காஞ்சியை விட்டுப் போவதும் எனக்குச் சம்மதமாயில்லை. இதனாலெல்லாம் என்ன விபரீதம் வருமோ என்னவோ என்று என் மனம் சஞ்சலமடைகிறது!'' என்றாள் பல்லவ சாம்ராஜ்ய சக்கரவர்த்தினி.

மேற்கண்டவாறு அன்று காலையில் அன்னை கூறிய வார்த்தைகள் மாமல்லருடைய மனத்தில் ஆழமாய்ப் பதிந்து கிடந்தன. இன்னதென்று சொல்ல முடியாத சோர்வு அவருடைய உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. பெரு முயற்சி செய்து அந்தச் சோர்வைப் போக்கிக் கொள்ள முயன்றார். வரப்போகும் யுத்தத்தையும் பாண்டியனைத் தாக்கி அவனைத் தண்டிக்கப் போவதையும் நினைத்துக் கொண்டார். அதனோடு மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கும் ஆயனர் மகளையும் எண்ணிக்கொண்டார். தாம் போகின்ற மார்க்கத்தை விட்டுக் கொஞ்சம் விலகிச் சென்றால், சிவகாமியைப் பார்த்துவிட்டுப் போகலாம். ஆனால் அது உசிதமாகாது என்று அவருடைய மனமே சொல்லிற்று. புலிகேசியைப் புறங்காட்டி ஓடச் செய்து விட்டுத் திரும்பி அவளிடம் வருவதாக அல்லவா அன்றைக்குச் சொல்லிக் கொண்டு விடைபெற்றோம்? பாண்டியனையாவது போர்க்களத்தில் புறங்கண்ட பிறகுதான் சிவகாமியைச் சந்திக்க வேண்டும். இவ்வாறான பற்பல எண்ணங்கள் அலைமேல் அலை எறிந்து மாமல்லரின் உள்ளத்தை அலைத்துக் கொண்டிருந்தன.



தளபதி பரஞ்சோதியும் வழக்கத்தைக் காட்டிலும் அதிகக் கடுமையாகத் தம்முடைய முகத்தை வைத்துக் கொண்டிருந்தார். ஒரு பெரிய பொறுப்பு உணர்ச்சியானது அவருடைய மனத்தில் பெரும் பாரமாய் அமர்ந்து அதை அமுக்கிக் கொண்டிருந்தது.

அன்று காலையில் சக்கரவர்த்தி அவரை அந்தரங்கமாக அழைத்து, ''தம்பி! உன்னை நம்பித்தான் மாமல்லனை இப்போது போர்க்களத்துக்கு அனுப்புகிறேன். அவனுடைய இப்போதைய மனநிலையில் முன்பின் யோசனை இல்லாமல் முரட்டுத்தனமாகக் காரியம் செய்வான். அவனுக்கு யாதோர் அபாயமும் நேரிடாதபடி நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்தப் புராதன பல்லவ குலம் நீடிப்பதற்கு அவன் ஒருவன்தான் இருக்கிறான். தளபதி! பாண்டிய நாட்டு மறவர்கள் மகா வீரர்கள். அவர்களையும் கங்நாட்டார்கள் என்று நினைத்து விடாதே. எளிதாக அவர்களைப் புறங்காண முடியாது. ஆகையால், சர்வ ஜாக்கிரதையாக நீ இந்த யுத்தத்தை நடத்த வேணும்'' என்று சொன்னார்.

மீண்டும் அவர், ''மாமல்லனை நீ போர்க்களத்தில் வேல்கள், அம்புகளிடமிருந்து மட்டும் காப்பாற்றினால் போதாது'' என்று கூறிவிட்டு, மர்மமான புன்னகையுடன், ''மண்டபப்பட்டுக் கிராமத்தில் இருக்கிறாளே, சிற்பியின் மகள் சிவகாமி, அவளுடைய கண்ணாகிய கூரிய அம்பிலிருந்தும் காப்பாற்ற வேண்டும், தெரிகிறதா? முன் தடவை துர்விநீதனைத் தொடர்ந்து போனபோது ஏற்பட்டதைப் போல், இந்தத்தடவை ஏற்பட்டுவிடக் கூடாது. போகும் காரியத்தை முடித்துவிட்டு நேரே காஞ்சிக்குத் திரும்பி வந்து சேர வேண்டும்'' என்றார்.

பரஞ்சோதி விடைபெற்றுக் கொண்டு புறப்பட யத்தனித்தபோது கடைசியாகச் சக்கரவர்த்தி அவரை மறுபடியும் அருகில் அழைத்து, ''தளபதி! நான் மண்டபப்பட்டுக் கிராமத்தைப் பற்றிச் சொன்னது திருவெண்காட்டுக்குப் பொருந்தாது. பாண்டியனைத் துரத்தியடித்த பிறகு உனக்கு விருப்பமாயிருந்தால் திருவெண்காட்டுக்குச் சென்று உன் தாயாரையும் மாமனையும் பார்த்துவிட்டு வா!'' என்று அருமையுடன் கூறினார்.

சக்கரவர்த்தி கூறிய ஒவ்வொரு விஷயமும் பரஞ்சோதியின் பொறுப்பு உணர்ச்சியை அதிகப்படுத்துவதாகவே இருந்தது. ஆகா! மகேந்திர பல்லவர் எப்பேர்ப்பட்ட அபூர்வமான மனிதர்! அவருடைய அன்பையும் நம்பிக்கையையும் இவ்வளவு தூரம் பெறுவதற்குத் தான் என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்! ஆனால், அவ்வளவு அன்புக்கும் நம்பிக்கைக்கும் தான் பாத்திரமாக வேண்டுமே! மாமல்லரைப் பத்திரமாகக் காஞ்சிக்குக் கொண்டு வந்து சேர்க்க வேண்டுமே? 'திருவெண்காட்டுக்குப் போய்விட்டு வா!' என்று சக்கரவர்த்தி கூறியது அவருடைய பெருந்தன்மைக்கு உகந்தது. ஆனால் அதற்கு இந்தச் சந்தர்ப்பம் தகுதியானதா? தன்னை இத்தகைய போர்க் கோலத்திலே பார்த்தால், தாயும், மாமனும் என்ன நினைப்பார்கள்?

**ஸ்ரீ சாரதாம்பாளுக்குக் காசுமாலை**

ஸ்ரீ சிருங்கேரி சாரதா பீடத்தின் அதிதேவதையான சாரதாம்பாளுக்கு, லலிதா சஹஸ்ரநாமம் பொறிக்கப்பட்ட ஆயிரம் பொற்காசுகள் கொண்ட காசுமாலைக் கைங்கரியம் நடைபெற்று வருகிறது. வருகிற ஐப்பசி மாதம் 27ந் தேதி புதன் கிழமை 13-11-74 தீபாவளியன்று காசுமாலையை அம்மனுக்குச் சாத்துவதாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்கள் சாத்துவார்கள். இப்புனித கைங்கரியம் பூர்த்தியடைய இன்னும் கொஞ்சம் திரவியம் தேவைப்படுகிறது. பக்தகோடிகள் தங்களால் இயன்ற பொருளுதவியைத் தாராளமாகச் செய்யுமாறு கேட்டுக் கொள்ளுகிறோம். பணமாகவும் தங்க நகைகளாகவும் வழங்கலாம். ஏற்கனவே இந்தப் புனித கைங்கரியத்தில் பங்கு பற்றியவர்களும், மேலும் சகாயம்செய்ய இருப்பவர்களும் 13-11-74 அன்று சிருங்கேரிக்கு வந்து அந்த வைபவத்தில் கலந்து கொண்டு ஸ்ரீ சாரதாம்பாளின் அனுக்கிரகத்துக்கும் பாத்திரமாகலாம்.

பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ஸ்ரீமதி நாராயணி வைத்திய சுப்ரமண்யம், ''நவனி-ஹூ'', ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-28.

# பிஓபிஎல் உங்களது சேமிப்புக் கணக்கிற்கு

# $5\frac{1}{2}\%$

# வட்டி அளிக்கிறது

சேமிப்புக் கணக்கிற்கு மட்டுமல்ல; பிக்ஸ்ட் டெபாஸிட்டிற்கும் பிஓபிஎல் அதிக வட்டி அளிக்கிறது.

ரெகரிங் டெபாஸிட்டுடன் பிக்ஸட் டெபாஸிட் கணக்கை இணைத்தால் உங்களுக்கு 17% வட்டி வரை கிடைக்கும். மேலும் விவரம் அறிய இன்றே எங்களுக்கு எழுதுங்கள்.

**பிஓபிஎல் — ஏழு பாங்க்குகளின் பக்கபலம் கொண்ட பாங்க்**



## பாரத் ஓவர்ஸீஸ் பாங்க் லிமிடெட்

'ஆக்ஸ்போர்ட் ஹவுஸ்'
மவுண்ட் ரோட், சென்னை 600 006 தொலைபேசி எண் : 812983

BOB 2050 TAH A

# துறு துறு வென குழந்தைகள் இரண்டு
# 30 வயது நளினிக்கு
# மெருகூட்டி அழகு செய்து கொள்ள
# நேரமில்லை அவளுக்கு.






அவளது
மிருதுவான சருமத்தை,
இயல்பாகவே
தூய நறுமணம் கொண்டு
பாதுகாக்கும் சோப்

## மைசூர் சாண்டல்

உங்கள் சருமம் மாசு மறுவற்று
மிருதுவாக மிளிர
மைசூர் சாண்டல் சோப்.

தயாரிப்பாளர்கள்:
கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்.



பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இன்டர்நேஷனல் லிமிடெட் பெங்களூர் - பம்பாய் - புது டில்லி - கல்கத்தா - சென்னை - செகந்திராபாத்

HCA/MSIL/SS/3




இளம் வயதில் டாக்டர் பெல்ட்னர் 'போலி'யோ, 'ருமாடிஸம்' வியாதிகளினால் அவதியுற்றுப் படுத்த படுக்கையாக இருந்தவர். அவர் இருபது வயதுக்கு மேல் இருப்பாரா என்று டாக்டர்கள் ஐயப்பட்டனர்! ஆனால் நாளடைவில் விளையாட்டுக் கலையினால் அவர் உடல் தேர்ச்சி அடைந்ததோடு 1924, 1928ம் ஆண்டுகளில் ஜெர்மனி சார்பில் ஒலிம்பிக் ஓட்ட வீரராகக்கூடக் கலந்துகொண்டார்! இந்தச் செயல் வீரர் சென்னைக்கு வந்து இரு சர்வகலாசாலை விளையாட்டுப் பயிற்சி முகாம்களை நடத்தினார். முதன் முதலில் சென்னையில் தேசிய ஓட்ட இளப் 1961ம் வருஷம் நிறுவப்பட்டபோது டாக்டர் ஓட்டோ பெல்ட்னர் அதன் தலைவராகி, ஓட்டக் கலையின் வளர்ச்சிக்குப் பாடுபட்டார்.

வருஷா வருஷம் அவர் நினைவாகச் சைதாப்பேட்டை மர்மலாங் பாலத்திலிருந்து புனித தாமஸ் மலை வரையில் நடக்கும் 'இராஸ் கன்ட்ரி — ஹில் ரேஸ்'ல் ஆயிரக்கணக்கான இளைஞர்கள் பங்கு கொள்கின்றனர். இந்த வருஷப் போட்டியில் தங்கப் பதக்கப் பரிசு பெற்றவர் ஜோசப் (படம்). இந்த ஓட்டப் பந்தயத்திலும் முப்பது நிமிஷங்கள் போக்குவரத்துத் தடைப்பட்டது! போகட்டும், ஓட்டப்பந்தயக் கலை தடைப்படாமல் வளர்கிறதல்லவா?

— குண்டுமணி

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

உமையாள் ஏற்கனவே நாணம் அதிகம் உள்ளவள். தன்னை அணுகுவதற்கே இப்போது பயப்படுவாளோ என்னவோ?— இவ்வாறெல்லாம் தளபதி பரஞ்சோதி எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்.

ரதத்தின் முனையில் அமர்ந்திருந்த கண்ணபிரானுடைய மனக் கண்ணின் முன்னால் அடிக்கடி ஒரு காட்சி வந்து கொண்டிருந்தது.

விடைபெற்றுக் கொள்ள வேண்டிய சமயம் வந்தபோது கண்ணபிரான் தன் எட்டு மாதக் குழந்தையின் முகத்தோடு முகம் வைத்து, "போய் வரட்டுமா, கண்ணே!" என்று கொஞ்சினான். அந்தக் குழந்தை அர்த்தம் ஒன்றுமில்லாமலும் அகாரணமாகவும் புன்னகை புரிந்ததுடன், தன் இரண்டு இளந்தளிர்க் கரங்களையும் நீட்டிக் கண்ணபிரானுடைய நீண்ட இரு காதுகளையும் பிடித்துக் கொண்டது. மேற்படி நினைவு வந்தபோதெல்லாம் குழந்தையின் தளிர்க் கரங்கள் அவன் காதைப் பிடித்த இடங்களில் அவனுக்கு என்னவோ செய்தது. மறுபடியும் அந்த மதுரமான ஸ்பரிச இன்பத்தை எப்போது அடையப் போகிறோமோ என்று அவன் மனம் ஏங்கிற்று.

அதோடு கடைசியாக அவன் புறப்பட்டபோது கமலி கூறிய மொழிகளும் அவனுக்கு அடிக்கடி நினைவு வந்து கொண்டிருந்தன. முன்னெல்லாம் "யுத்தத்துக்கு எப்போது புறப்படுகிறாய்?" என்று கேட்டுக் கொண்டிருந்தவள், கண்ணபிரான் உண்மையாகப் புறப்படும் சமயம் வந்தபோது, "கண்ணா! மகேந்திர பல்லவருக்கு இப்படி ஏன் புத்தி கெட்டுப் போய் விட்டது? வாதாபிச் சக்கரவர்த்தியை விருந்தாளியாக வரவேற்பதாம்! பாண்டிய ராஜாவோடு சண்டை போடுவதற்கு மாமல்லரை அனுப்புவதாமே? என் மனம் ஏனோ தத்தளிக்கிறது கண்ணா! எது எப்படியானாலும் என் தங்கை சிவகாமியை மறந்து விடாதே! மாமல்லருக்கு நினைவூட்டு!" என்றாள்.

இவ்விதமாக அந்த ரதத்தில் இருந்த மூன்று பேருடைய உள்ளங்களும் வெவ்வேறு சிந்தனைகளில் ஆழ்ந்தபோதிலும் பதைபதைப்பிலும் பரபரப்பிலும் வருங்காலத்தில் என்ன நேருமோ என்ற கவலையிலும் ஒன்றுபட்டிருந்தன. எனவே, அவர்களுடைய இருதயத் துடிப்புக்கள் ஒரே ஸ்வரத்தில், ஒரே தாளத்தில் சப்தித்தன.

(தொடரும்)



# பண், பணி, பணிவு!

ஸ்ரீமதி எம். எஸ் பண்ணுக்காகப் பெற்ற விருதுகள் பல. சங்கீத கலாநிதி, இசைப் பேரறிஞர், இன்னும் பல 'டாக்டரேட்'கள், பத்ம பூஷணம், தேசிய விருது யாவும் அவரது இசை விருந்துக்காகவே கிடைத்தவை.

இப்போது பண்ணின் பயனான பணிக்கு ஒரு சர்வதேச விருது கிடைத்திருக்கிறது. ஆசியாவின் நோபல் பரிசு எனப் புகழ் கொண்ட மாக்ஸாய் ஸாய் விருதினைப் பெற்ற முதல் தமிழர் என்ற பெருமை எம்.எஸ்ஸுக்குக் கிட்டியுள்ளது.

**யா**ர் இந்த மாக் ஸாய் ஸாய்?

எளியராகப் பிறந்து 'தம் பலம் கொண்டு அம்பலம் ஏறிய' ஒரு பெருந்தகையார்தான் ரமான் மாக் ஸாய் ஸாய்.

கருமார் ஒருவருக்குப் பிள்ளையாகப் பிறந்தார் 1907, ஆகஸ்ட் 31ந் தேதியன்று. சரியாக இவரது 68வது ஜன்ம தினத்தன்றுதான் விருதளிப்பு விழா நடந்தேறியது. கால் நடையாகப் பல மைல்கள் நடந்து சென்று கலாசாலையில் படித்தார். பிறகு வர்த்தகத்தில் பட்டம் வாங்கினார். படிப்பை முடித்து ஒரு பஸ் கம்பெனியில் மெகானிக்காக வேலைக்கு அமர்ந்தார். படிப்பு என்பது கல்வியாகி, உள்ளூறி இருந்தது. அறிவும், நன்னடத்தையும் தொழிலில் 'பேச' ஆரம்பித்தன. ஓரிரு பஸ்களை மட்டும் பழுது பார்ப்பதோடு நின்று விடாமல், நொடித்து விழ இருந்த பஸ் கம்பெனியையே செப்பனிட்டு, நிலை நிறுத்தினார். மெகானிக் மானேஜரானார்.

மற்றொரு பெரிய திருப்பம்! இரண்டாவது உலக மகாயுத்தத்தில் ஃபிலிப்பைன்ஸ் மீது ஜப்பான் படையெடுத்தபோது, மாக்ஸாய்ஸாயைத் தேசத் தியாக உணர்வு பற்றிக் கொண்டது. நாட்டை ஆண்டு வந்த அமெரிக்காவின் படையில் வீரராகச் சேர்ந்தார். போரில் வீர சாகஸங்கள் பல புரிந்து 10,000 கெரில்லாக்கள் கொண்ட ஒரு படைப் பிரிவுக்குக் கமாண்டராக உயர்ந்தார். ஜம்பாலஸ் நிலை ஜப்பானியரிடமிருந்து விடுவித்தார். "மேஜராக" ஏற்றம் கொண்டார்.

1946ல் பிலிப்பைன்ஸ் நாடு சுதந்திரம் பெற்றபின் இந்த நன்மகன் தேசியப் பாதுகாப்பு மந்திரியானார். "ஹுக்ஸ்" என்கிற கம்யூனிஸ்ட்களை அடக்குவதற்காகக் கெரில்லா முறைகளைக் கைக் கொண்டார். வெற்றியும் கண்டார். "சர்வதேசிய கம்யூனிஸத்தின் மீது ஆசியா கொண்ட முதல் வெற்றி" என இது பாராட்டப் பெற்றது.

1953-ல் இப்பெருமகன் தேசியக் கட்சியின் வேட்பாளராக ஃபிலிப்பைன்ஸ் ஜனாதிபதியானார். அதன்பின் உண்டான 'ரமான் ராஜ்ய'த்தில் ஒரு ராமராஜ்ய சகாப்தத்

○ படம்: பண்ணுடன் விளைந்த பணிகளுக்கான விருதைப் பணிவுடன் ஏற்கிறார் எம். எஸ்.










தையே உருவாக்கினர். தனி மனித உரிமை, நிர்வாக நேர்மை இவற்றை இரு கண்களாகக் கொண்ட ஒப்பற்ற ஆட்சியை ஏற்படுத்தினர். ஆரம்ப கால எளிமையை மறவாமல் மக்களோடு மக்களாக விளங்கி அவர்களுக்குப் புத்தெழுச்சி தந்தார். உலகப் போரில் பாழ்பட்ட ஃபிலிப்பைன்ஸ் முன்னிலும் வளப்பாக, வளப்பமாகப் புத்துருவம் கொள்ளச் செய்தார். முன்பு நொடித்து விழுந்த ஒரு தொழிற்சாலையைப் புத்துயிர் கொள்ளச் செய்தவர் இப்போது தம் தேசத்தையே செப்பனிட்டு விட்டார்!

ஆனால் அற்புத சகாப்தம் நாலே ஆண்டுகளில் முடிந்தது. 1957ம் ஆண்டில் ஒரு விமான விபத்தில் மாக் ஸாய் ஸாயின் இன்னுயிர் பலியாயிற்று! ஃபிலிப்பைன்ஸின் தேச பிதாவும், ஆதியில் நாட்டுக்காகப் பிராணத் தியாகம் செய்தவருமான ஹோஸே ரிஜாலுக்குச் சமதையாக — அல்லது அடுத்த படியாக — இன்றும் அவரை ஃபிலிப்பைன்ஸ் மக்கள் நன்றியுடன் போற்றி வருகின்றனர்.

நன்றி அஞ்சலியின் உருவகமாகவே 1957ல் 'ரமான் மாக்ஸாய் ஸாய் பரிசு' நிறுவப்பட்டது. இதற்கு நியூயார்க் ராக்ஃபெல்லர் சோதரர் நிதியம் ஐந்து லட்சம் டாலர் நன்கொடை அளித்தது. ஃபிலிப்பைன்ஸ் ஆட்சி சபை (காங்கிரஸ்) இதற்கான கட்டிடம், நிலம் முதலியன அளித்து. இவற்றோடு தானும் பல நன்கொடைகள் வழங்கிற்று. மாக்ஸாய் ஸாயின் பெயரில் அரசுப் பணி, பொதுப் பணி, சமூகத் தலைமை, இலக்கியம், சர்வ தேச ஐக்கியம் ஆகிய ஐந்து துறைகளைச் சேர்ந்த பெரியோர்களுக்கு ஆண்டுதோறும் இழி அளிப்பதாக முடிவு செய்யப்பட்டது.

இவ்வருடம் ஸ்ரீமதி எம். எஸ். ஸோடு பரிசு பெற்ற நால்வர்: ஹிரோஷி குரோகி, ஜப்பானிய கவர்னர் — அரசுப் பணிக்காக; மிஸ் ஃபுஸாயி இசிகாவா என்ற 81 வயதான ஜப்பானிய மாதரசி — சமூகத் தலைமைக்காக; ஃபிலிப்பைன்ஸ் பத்திரிகாசிரியர் ஜகாரியஸ் ஸாரியன் — முப்பத்தேழே வயதான இவர் இலக்கியத் துறைக்காகப் பரிசு பெறுகிறார். இயேசு கழகத்தைச் சேர்ந்த அமெரிக்கரான

படங்கள்:

- மக் ஸாய் ஸாய் விருதுடன் வந்த அவரது உருவம் பொறிக்கப்பட்ட தங்கப் பதக்கம்.
- மணிலா நகரத்தின் ஒரு தோற்றம்.
- திருமதி மக் ஸாய் ஸாயுடன் இவ்வாண்டு விருது பெற்ற இவர்.
- திருமதி மக்ஸாய்ஸாயுடன் ஸ்ரீமதி ராதா விசுவநாதன், சதாசிவம் தம்பதி.







வில்லியம் மாஸ்டர்ஸன் — சர்வதேச ஐக்கியத்துக்காக.

எம். எஸ்ஸுக்கு அளிக்கப்பட்ட அழகுமான வாழ்த்திதழில் அவர் ''தெய்விக கீதங்களை மகோன்னதமாக இசைத்துப் பற்பல ஆண்டுகளாகப் பற்பல பொதுப் பணிகளுக்களுக்கு ஆதரவு நல்கி வருவதற்காக''ப் பாராட்டுத் தெரிவிக்கப்படுகிறது. அவரது இசையால் சுமார் பத்து லட்சம் டாலர் (கிட்டத்தட்ட ரூ. 80,00,000) நன்கொடை வழங்கப்பட்டிருப்பதை அது குறிப்பிட்டுச் சிலாகிக்கிறது.

இதில் குறிப்பிட வேண்டிய அம்சம், 'உதவிக் கச்சேரி' என்ற பெயரில் ஸ்ரீமதி எம்.எஸ் தமக்காக எதுவுமே சம்மானம் பெறாமல் ஒரு பொதுக் காரியத்துக்கென்றே செய்த கச்சேரிகளில் திரண்ட தொகையே இந்த எண்பது லட்சம். இது தவிர அநேக சபாக் கச்சேரிகளில் ஸ்ரீமதி எம். எஸ் தமக்குரிய சம்மானத்தைத் தாமே பெறாமல், அதனை ஏதேனும் ஒரு பணிக்காக ஒதுக்குமாறு செய்து வருகிறார். இது எம். எஸ்ஸின் மூலம் கிடைக்கும் நன்கொடை மட்டுமல்ல; எம். எஸ்ஸே தமது தியாகத்தால், உதாரத்தால் கிடைக்கச் செய்கிற நன்கொடையாகும். இதையும் கணக்கெடுத்தால் எண்பது லட்சம் என்பது ஒரு கோடியாகவும் ஆகலாம்.

**எம்.** எஸ்ஸின் சேவைக்குச் சிகரமாக விளங்கிய மாக்ஸாய் ஸாய் விழாவில் அவர் ஈகையின் சிகரத்திலும் ஆரோகணித்து விட்டார்! பரிசாக வழங்கப்பெற்ற பத்தாயிரம் டாலரையும் அங்கேயே, அப்பொழுதே மூன்று நல்ல பணிகளுக்காக அவர் அளித்தாரே, அது அவர் ஒருவரால்தான் செய்யக் கூடும்!

ஆனாலும் தாம் அதைச் செய்ததாக அவர் கருதவில்லை. தம்முடைய ஆக்க சக்தியும், ஊக்க சக்தியுமான ஸ்ரீ சதாசிவம் அவர்களே 'தம்முடைய இசைக்கு மட்டுமின்றி அறப் பணிக்கும் ஆதாரமானவர் என்றே கூறுகிறார். விருதளிப்பில்தான் அவர் இதனை எத்தனை அழகாகக் கூறிவிட்டார்? ''பொதுப் பணிக்காக நீங்கள் தருகிற இப்பரிசுக்கு யதார்த்தத்தில் நான் பாத்திரமாகிறேன்; ஆனால் நியாயப்படி இதற்குப் பாத்திரர் என் கணவரே'' என்று கூறிப் பாரதப் பெண் தர்மத்தின் சிகரத்திலும் ஏறியிருக்கிறார்! சங்கீதத்தில் போலவே வாழ்க்கையிலும் அநாயாசமாக மேல் பஞ்சமம் பிடித்து விட்டார்!

எம். எஸ்ஸின் இசை வாழ்வையும், ஈகை வாழ்வையும் பார்த்துப் பார்த்து உருவாக்கி வரும் ஸ்ரீ சதாசிவம் எத்தனை அருமையாகச் சிந்திப்பவர் என்பதற்கு இப்பரிசை அவர் பங்கிடு செய்துள்ள விதமே ஒரு சான்று. பஜனை இசை உள்பட பாரதக் கலாசாரத்தின் சகல அம்சங்களுக்கும் தொண்டாற்றி வரும் மாபெரும் நிறுவனமான பாரதிய வித்யா பவனம்; மக்களின் பிணி தீர்க்கும் பணியைச் சிறப்புற ஆற்றி வரும் அடையாறு வி. ஹெச். எஸ்.; பாரதம் பாரதமாக இருப்பதற்குக் காரணமான வேதத்தை நாலரை நூற்றாண்டுகளாகப் புனிதத்வம் குன்றாமல் புகட்டிப் பெருமை கொண்டுள்ள கும்பகோணம் ராஜா வேத பாடசாலை — இம்மூன்றுக்கும் சம அளவில் பரிசுத் தொகை பங்கிடு செய்யப்படுகிறது. மனத்தை வளர்ப்பது பவனம்; உடலை வளர்ப்பது வி. எச். எஸ்.; மனம், உடல் இரண்டையும் வளர்த்து, இரண்டுக்கும் மூலமான ஆத்மாவில் கரைப்பது வேதம். இதைவிடப் பாங்காகப் பங்கிடு செய்ய இயலுமோ?

ஸ்ரீ சதாசிவத்தை ஸ்ரீமதி எம். எஸ் இதய அடிவாரத்திலிருந்து நன்றிகூர்ந்து பேசியிருப்பது போலவே, அவரும், ''மனஸ்வினியும், கபடற்றவளுமான சுப்புலக்ஷ்மி என்னைப் புகழ்ந்திருப்பது அவளது சுபாவத்துக்கு ஏற்றதேயாகும். ஆனால் என்னை நானாக ஆக்கியிருப்பது அவளுடைய சங்கீதம்தான் என்பதைத் தெரிந்து கொள்ளாமலே அவள் பேசுகிறாள்'' என்று கூறுகிறார்! எத்தனை இனிய கௌரவமான பரஸ்பர உறவுப் பண்பு!







இடது பக்கம்: ○ மணிலா விமான நிலையத்தில் கே. எல். எம். விமானத்தை விட்டு இறங்கியதும். இடது கோடியில் கண்டதேவி அழகர்சாமியும் காரைக்குடி மணியும்.

○ எம்.எஸ்ஸுக்கு மலர்மாலை சூடி வரவேற்பு.

○ விருது பெறுவோருக்கு லுனேடா பூங்காவில் ராணுவ மரியாதையுடன் வரவேற்பு.

இந்தப்பக்கத்தில்: ○ ஹோஸே ரிசால் சமாதியில் மலர்வளையம் சமர்ப்பித்து அஞ்சலி.

○ மக்ஸாய்ஸாய் நினைவுக்கு அஞ்சலி.

○ மணிலா நகரின் 'சாவி'யை ஸ்ரீமதி எம். எஸ்ஸுக்கு வழங்குகிறார் மேயர்.

இந்தப் பண்புகளுக்கெல்லாம் காரணம் இவ்விருவரும் சில மகா புருஷர்களிடம் கொண்டிருந்த, கொண்டுள்ள ஆழ்ந்த பக்தி விசுவாசம் என்றே சொல்லலாம். இதனைப் பற்றி எம். எஸ் மணிலாவில் பேசியதை விடச் சிறப்பாகச் சொல்வதற்கில்லை. கர்நாடக கீதத்தின் மதுரம் ஆங்கிலப் பேச்சிலும் வடிய ஸ்ரீமதி எம். எஸ் கூறினார்:

''சமாதானத்தின் தெய்வ தூதரான மகாத்மா காந்தியையும், இந்தியக் குடியரசின் முதல் பிரதமரான அன்புக்குரிய ஜவாஹர்லால் நேருவையும், ராஜாஜி என்று பாசத்தோடு அழைக்கப்பட்ட சக்கரவர்த்தி ராஜகோபாலச்சாரியையும் இன்று என் வணக்கம் நிறைந்த நினைவு சுற்றிச் சுற்றி வருகிறது. இம்மூவரின் மந்திர சக்தி வாய்ந்த அன்புக்குக் கட்டுப்பட்டு நிற்கும் இணையற்ற நற்பேறு எனக்குக் கிட்டியிருந்தது. இந்தத் திரிமூர்த்திக்கு என் ஆழ்ந்த வணக்கங்களை அளிக்கிறேன்... இறைவனுடன் இணைப்புக் கொள்வதையே இலட்சியமாகக் கொண்டது எங்கள் இசை. இந்த நோக்கத்தை நான் நிறைவேற்றியிருப்பேனாகில், அதற்கு முற்றிலும் காரணம் இறைவனின் கருணையே ஆகும். அந்த இறைவனே என் நன்றிக்கும் அப்பாற்பட்டவன். ஆயினும் அவனே இன்று தமது எண்பத்தொன்றாவது பிராயத்தில், தெய்விகமே சதையும் ரத்தமுமாக மனித உருக் கொண்டு பொலிகிற காஞ்சி முனிவராக என்னால் அடையக்கூடியவனாக வந்திருக்கிறான். எனது அந்தராத்ம பூர்வமாகக் காஞ்சி முனிவருக்கு அஞ்சலி செலுத்துகிறேன். எனக்குச் செய்யப்படும் பாராட்டுக்களுக்கு நான் பாத்திரமாவதற்கு அவரே எனக்கு அநுக்கிரகிக்க வேண்டுமெனப் பிரார்த்திக்கிறேன்.''

பண்ணும் பணியும் பணிவில் நிறைகின்றன!

—கன்யா

**மணிலாவிலிருந்து ஆசிய அபிவிருத்தி வங்கியில் பணியாற்றும் டாக்டர் ம. சு. சீனிவாசன் எழுதுகிறார்:**

காஞ்சிபுரம் சேலை மின்ன, மணிலா விமான நிலையத்தில் இறங்கினார்கள் ஸ்ரீமதி எம். எஸ்ஸும், ஸ்ரீமதி ராதாவும். விபூதிப் பட்டை துலங்கக் காட்சி தந்தார் திரு சதாசிவம். எல்லோரையும் மணமிகு மல்லிகை மலர் மாலைகள் சாத்தி வரவேற்றனர், காத்திருந்தோர். இவர்களில் மக்ஸய்ஸாய் நிறுவனத்தின் பாதுகாவலர் திருமதி பெலன் ஆப்ரு, காரியதரிசி திருமதி நேனே முனேஜ் ஆகியோரும் இந்தியத் தூதராலய கலாச்சார அதிகாரியும் மணிலா வாழும் சில இந்தியர்களும் இருந்தனர். சில நிமிடங்களில் எல்லோ



"நமது சங்கத் தலைவர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானத்துக்கு ஆதரவாக நீங்கள் கை தூக்க வேண்டும்."

---

ரையும் இரண்டு மோட்டார் 'வாகனங்களில் ஏற்றி, முன்னே "மெட்ரோகாம்" எனப்படும் போலீஸ் வண்டி வழிகாட்டச் சாலே வழியே ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். எம். எஸ் குழுவினர் தங்க மணிலாவில் இரு தமிழர்கள் வீட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இக்குழுவினர் மணிலாவில் தங்கியிருந்த எல்லா நாட்களும் இசையரசி எம். எஸ்ஸுக்கு ராஜ வரவேற்பும் மரியாதையும் அளிக்கப்பட்டன.

மறு நாள் (ஆகஸ்ட் 31). காலையில் விருதுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரியோர்களுக்கு மணிலா மேயர் திரு பகத்சிங், லுனேடா பூங்காவில் வரவேற்பளித்தார். அவ்வமயம் திருமதி எம். எஸ்ஸுக்கு மணிலா நகரத்தின் 'சாவி' அளிக்கப்பட்டது. எம்.எஸ். அவர்களை எப்போதும் மணிலா நகரம் வரவேற்கக் காத்திருக்கிறது என்பது இதன் அர்த்தம். அது முடிந்ததும் அந்த லுனேடா பூங்காவிலிருக்கும் டாக்டர் ஜோஸே ரிசால் அவர்களுக்கு மக்கள் எழுப்பிய நினைவுச் சின்னத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு எம். எஸ் மலர் வளையம் சமர்ப்பித்து மரியாதை செலுத்தினர். பிறகு நாட்டுக் கொடி நகரக் கொடிகளுடன் பூங்காவில் அவர் நடத்திச் செல்லப்பட்டார். மணிலா நகரத்தின் மத்தியில் உள்ள லுனேடா பூங்கா மிக அழகானது; மிகப் பரந்தது. இப் பூங்காவில் கலேக் கூடங்களும் சீன ஜப்பானியப் பாணிகளில் பூந்தோட்டப் பகுதிகளும் உண்டு. இசைக்கு ஏற்றபடி ஆடும் நீர்ச் சுனைகளும், பலவித விளக்குகளில் பிரகாசிக்கும் சுனைகளும் செயற்கைக் குளங்களும் உண்டு. வண்ண மலர்கள் சிரிக்கும் இப் பூங்காவில் செவிடர்கள் — ஊமைகள் நடத்தும் ஒரு சிற்றுண்டிச்சாலேயும் இருக்கிறது.

அடுத்தபடியாக முன்னாள் ராஷ்டிரபதி திரு ரமோன் மக்ஸேஸேயின் சமாதிக்கு எம். எஸ். அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு விருதுபெறும் பெரியோர்கள் மலர் வட்டம் சாத்தி மரியாதை செலுத்தினர்கள்.

சனிக்கிழமை மாலே 5-30 மணிக்கு விருதுகள் வழங்கும் விழா தொடங்ியது. பிலிப்பைன்ஸ் — அமெரிக்க நல்லுறவு காரணமாகத் தோன்றிய பிலாம்—லைப் இன்ஷூரன்ஸ் கட்டடத்தின் பெரிய அரங்கத்தில் விழா ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. சரியாக ஐந்தரை மணிக்கு விழா தொடங்கியது. திருமதி ரமோன் மக்ஸேஸே விருதுகள் பெறவிருக்கும் பெரியோர்களைப் புகைப்படம் எடுத்துக் கொண்டார். பிறகு நாட்டின் ஸுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதி மகாகனம் திரு குருபே மகலிந்தால் அவர்கள் ரமோன் மக்ஸேஸே நிறுவனத்தின் பாதுகாவலர்களால் மிக மரியாதையாக மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். தொடர்ந்து விருதுகள் பெறத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐவரும் மேடைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

பிலிப்பைன்ஸ் நாட்டுக் கொடிகளைத் தாங்கிய, வீரர்கள் ராணுவ நடையுடன் கொடிகளை மேடைக்கு எடுத்துச் சென்று நிறுத்தினர். கொடி வணக்க இசையுடன் விழா தொடங்கிற்று. அந்தப் பெரிய சபை, பல நாட்டுத் தூதுவர்களாலும், ஐ.நா சங்கம் ஆசிய அபிவிருத்தி வங்கி முதலியவற்றில் வேலே செய்யும் பல நாட்டு அறிஞர்களாலும் மற்றும் பல துறைப் பெரியோர்களாலும் நிரம்பி வழிந்தது. இச்சபை கொடி வணக்கத்துக்கு எழுந்து மரியாதை செலுத்திற்று.

திரு ரமோன் மக்ஸேஸே நிறுவனத்தின் பாதுகாவலர்கள் குழுவின் தலைவர் திரு மனுவேல் மனஹான் அவர்கள் விழாவின் தொடக்கவுரை நடத்தினர்.

அதன் பின்னர் சங்கத்தின் பாதுகாவலர்கள் ஒவ்வொருவராக விருது வழங்கத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் பற்றி வரிசையாகப் பேசினர்கள்.

நாட்டின் பிரதம நீதிபதி, திரு ரமோன் மக்ஸேஸேயின் உருவம் தாங்கிய ஒரு மெடலேக் கொண்ட சிறு பெட்டியையும் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் சேவைகளைக் குறிக்கும் விருதுப் பத்திரத்தையும், எம். எஸ் அவர்களுக்கு வழங்கினர். சபையோரின் பெருத்த ஆரவாரத்துடன் எம்.எஸ் விருதுகளைப் பெற்று எல்லோரையும் வணங்கினர்.

விருதுபெற்ற எம். எஸ். நன்றி செலுத்த மைக்குக்கு முன் வந்து நின்று வணங்கினர். எல்லோரும் அவர் பேச்சைக் கேட்க நிசப்தமானர்கள். எம்.எஸ் தம்முடைய இனிய குரலில் கோவிந்தாஷ்டகப் பாடலேப் பாடி வணக்கம் செலுத்தினர்! சபையோர்கள் அனைவரும் ஆச்சரியம் அடைந்தனர். தொடர்ந்து எம். எஸ் தமக்கே உரிய அடக்கத்துடன் சில வார்த்தைகள் பேசினர். பலத்த ஆரவாரத்துடன் சபையோர் அவர் கூறியதை ஆமோதித்தார்கள். இரவு பத்து மணிக்கு பிலிப்பைன்ஸ் நாடெங்கும் டெலிவிஷனில் மேற்படி நிகழ்ச்சி காண்பிக்கப்பட்டது. அடுத்து விருது பெற்றவர்களுக்கும் சில விருந்தினர்களுக்கும் ரமோன் மக்ஸேஸே நிறுவனத்தின் கூடத்தில் விருந்தளிக்கப்பட்டது.

மறு நாள் ஞாயிற்றுக்கிழமை சதாசிவம் தம்பதிகள் ஐம்பது மைல் தூரத்தில் இருக்கும் டகைடாய் என்னும் எரிமலைத் தீவுக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். வழி நெடுகக் கிராமப் புறத்தின் அழகைக் கண்டு ரசித்தனர். கேரளம் போன்று பசுமையாக விளங்கிய காட்சிகள் மனத்தைக் கவர்ந்தன. ஒரு பெரிய ஏரிக்கு நடுவில் அந்த எரிமலை இருக்கிறது. 1968ம் ஆண்டு வெடித்து அனல் கக்கிய பிழம்பு ஆறி அந்த எரிமலைச் சரிவுகளில் வழிந்திருப்பதை இன்றும் காணலாம். அற்புதக் காட்சி!

மாலை ஐந்து மணிக்கு திரு சதாசிவமும் எம்.எஸ்ஸும் பத்திரிகையாளர்களைச் சந்தித்தார்கள். அவ்வமயம் அவர்கள் பிலிப்பைன்ஸ் மக்களின் பண்பையும் இந்த விருது தந்த மேன்மையையும் என்றும் நினைவுகூருவதாகத் தெரிவித்தார்கள்.

மாலை 7-30 மணிக்கு இந்தியத் தூதுவர் திரு பூர்ணேந்து நஸ்கர் வீட்டில் எம்.எஸ் குழுவினருக்கும் நண்பர்களுக்கும் வெகு விமரிசையாக விருந்து நடந்தது. எல்லோரும் மறு நாள் நடக்கவிருக்கும் கச்சேரியை ஆவலுடன் எதிர்பார்ப்பதாகக் கூறினார்கள். அவர்களை மறு நாள் வரை காக்க வைக்காமல் உடனே அப்போதே ஸ்ரீமதி எம்.எஸ் ஸ்ரீமதி ராதாவுடன் தனதான்ய என்று தொடங்கும் வங்காளிப் பாட்டை மிக அழகாகப் பாடினார். அனைவரும் மெய்ம்மறந்து போனார்கள்.

திங்கட் கிழமை காலை ரமோன் மக்ஸேஸாய் நிறுவனத்தில் சிற்றுண்டி வரவேற்பு அளிக்கப்பட்டது. சதாசிவம் தம்பதியரும் மற்ற விருது பெற்றவர்களும் 10–30 மணிக்கு பிலிப்பைன்ஸ் நாட்டு ராஷ்டிரபதி பெர்டினண்ட் மார்கோஸைக் காணச் சென்றனர். நாட்டுத் தலைவர் விருதுபெற்ற பெரியோர்களுக்கு வாழ்த்துத் தெரிவித்து அவர்கள் சேவைகளைப் பாராட்டினார். தொடர்ந்து பொதுமக்களுக்கும் சமுதாய முன்னேற்றத்துக்கும் சேவை செய்து வர வேண்டும் என்று கூறினார். எம். எஸ். அவர்களின் பாடல்களைத் தாம் மிகவும் ரசிப்பதாகச் சொன்னார்.

நாட்டின் முதல் பிரஜையின் துணைவி திருமதி இமல்டா மார்கோஸ் முயற்சியால் கட்டப்பட்ட பிலிப்பைன்ஸ் கலாசார நிலையத்தின் அரங்கத்தில் எம். எஸ் அவர்களின் ஒன்றரை மணி நேரக் கச்சேரி ஏற்பாடாகியிருந்தது. எம்.எஸ் மணிலா வரும் அரிய வாய்ப்பைப் பயன்படுத்தி மணிலாவில் ஒரு கச்சேரிக்கு அங்கு வாழும் இந்திய மக்கள் ஏற்பாடு செய்தனர்.

கச்சேரி ஆரம்பிக்க அரை மணி முன்னரே அந்த அரங்கம் பூரணமாக நிரம்பிவிட்டது. எதிர்பாராத வகையில் திருமதி இமல்டா மார்க்கோஸ் அவர்களே கச்சேரியைக் கேட்க வந்து அமர்ந்தார்! சபை ஆச்சரியப்பட்டது. குறித்த காலத்தில் கச்சேரி இறை வணக்கத்துடன் ஆரம்பமாயிற்று. பல மொழி, பல பிரதேச, பல நாட்டு மக்கள் அனுபவிக்கும்படி சங்கராசாரியார், மீராபாய், துளசிதாஸ், ரவீந்திரநாதர், கோவிந்த பட்டாசாரியார் முதலிய பெரியோர்களின் பக்திப் பாடல்களைப் பாடினார். சபை மனம் லயித்துக் கேட்டது.



''சாம்பாரில் என்ன தான்?''
''மெனு போர்டில் என்ன எழுதியிருக்கிறது என்று பார்த்து விட்டு வந்து சொல்கிறேன்.''

ஒன்றரை மணி நேரம் என அறிவிக்கப்பட்ட கச்சேரி இரண்டரை மணிக்கு மேல் ஓடியது. சபையிலிருந்து ஒருவரும் நகரவில்லை! திருமதி இமல்டா மார்கோஸும் பாட்டில் மயங்கி இதர அலுவல்களை மறந்து கச்சேரி முழுவதும் அமர்ந்து ரசித்தார்.

கச்சேரி முடிந்தது. திருமதி இமல்டா எம்.எஸ் அவர்களை வாயார வாழ்த்திப் புகழ்ந்தார். 'நீங்கள் பாடிய பாடல்கள் என் மனத்தைத் தொட்டது; மொழி புரியாவிட்டாலும் அவற்றின் உணர்ச்சியை அனுபவித்தேன்' என்று கூறி, மறு நாள் எம். எஸ் குழுவைத் தம் வீட்டில் பகலுணவுக்கு வரும்படி அழைத்தார்.

மறு நாள் பகலுணவுக்குச் சென்ற சதாசிவம் தம்பதியைத் திருமதி இமல்டா அன்போடு உபசரித்தார். ஒரு மணி நேரத்துக்குக் கொடுத்த அழைப்பு மூன்று மணி நேரம் நீடித்தது! திருமதி இமல்டா இந்திய இசை, இந்தியக் கலை, இந்தியப் பண்பாடு இவற்றைப் பற்றி வெகு ஊக்கத்துடனும் அக்கறையுடனும் கேட்டறிந்து அளவளாவினார்.

மாலை சதாசிவம் குடும்பம் மணிலாவில் உள்ள இந்துக் கோயிலுக்கும் சீக்கியர் கோயிலுக்கும் சென்று இறைவனைத் துதி செய்தது. அதன் பின்னர், இந்திய சமுதாயமும் இந்திய வர்த்தகர் சங்கமும் அவர்களுக்கு ஓர் உபசார விருந்தளித்தது. அதில் பல பிரமுகர்களும் கலந்து கொண்டு எம். எஸ் விருது பெற்றதும் இந்நாட்டுக்கு வந்ததும் ஒரு கச்சேரி நிகழ்த்தியதும் எல்லோருக்கும் பெருமை தருவதாகும் என்று புகழ்ந்தனர்.

புதன் கிழமையன்று எம். எஸ் குழுவினர் தங்கள் பிலிப்பைன்ஸ் பயணத்தை முடித்துக் கொண்டு டோக்கியோவுக்குப் புறப்பட்டனர். ரமோன் மக்ஸேஸாய் நிறுவனத்தினரும், இந்தியத் தூதரகத்தினரும் பல இந்தியர்களும் வழியனுப்பினார்கள்.

விமானம் கிளம்பிப் போன பின்னும் எம். எஸ் பாடல்கள் மணிலா மக்களின் இதயங்களில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

இடி விழுந்த கோபுரம் என்பார்களே, அதைப் போன்ற "கலகல"த்த நிலையில்தான் சுல்தானாவும் இருந்தாள். விழுப் புண்களோடு திரும்பியிருக்கும் வீரர்களுக்குப் பணி புரிவது தெய்வத்தைத் தொழுவதற்கு ஒப்பாகும் என்ற உயர்ந்த எண்ணத்திலும், மன அமைதிக்கு வழி தேடும் அருமருந்தாகவும் அந்தப் பணியை வலிய ஏற்றுக்கொண்ட அவளேதான் இறைவனின் தரிசனத்துக்காக ஆலயத்துக்குச் சென்ற பக்தனைப் பேயறைந்த கதையாக, இருந்த மன அமைதியையும் இழந்து அதிர்ந்து போய்த் திரும்பிக் கொண்டிருந்தாள்!

சுல்தானா மாடிப் படிகளைக் கடந்து வராந்தாவுக்கு வந்தபொழுது எதிரே பரபரப்போடு வந்த மிஸஸ் மாத்யூஸ், "சுல்தானா! அந்த எண்பத்திரண்டாவது படுக்கை நோயாளி ஏதோ எழுத வேண்டும் என்று கூறினாரே.... போனாயா...? கடிதத்தை எழுதிவிட்டிருந்தால் உடனே அதிகாரிகள் பார்வைக்கு அனுப்பி வைத்துவிடு. அந்த ஜவான் எழுதும் இறுதிக் கடிதம் இதுவாகத்தான் இருக்கும். அவனுடைய உடல் நிலை அவ்வளவு மோசமாக இருக்கிறது" என்று பேசிக் கொண்டே போனவள், சுல்தானாவின் முகத்தைக் கண்டதும் திகைத்துப் போய்த் தன் பேச்சை நிறுத்திவிட்டு அருகில் வந்து அவள் தலையை அன்போடு தடவிக் கொடுத்தாள்.

பாதிக்கப்பட்ட மனம் ஆதரவு கிடைக்கும்போது சும்மாவா இருக்கும்? சுல்தானாவின் கண்கள் அருவியாக மாறின. சூழ்நிலையை மறந்து, "ஸிஸ்டர்!" என்று மாத்யூஸின் தோளில் சாய்ந்து கொண்டு விம்மினாள்.

"சுல்தானா...! மனத்தை உறுதிப்படுத்திக் கொள். இந்த இடத்தில் நமது சொந்த விருப்பு வெறுப்புக்களுக்கு



# பிறவிப்பயன்

'ரேவதி'

இடமே இல்லை. 'சமூக சேவகி' என்று முத்திரையிட்டுக் கொண்ட நாமே கண் கலங்கத் தொடங்கி விட்டால், இங்கே இருப்பவர்களின் கண்ணீரைத் துடைப்பது எப்படி? எதுவாகஇருப்பினும் மனத்தை உறுதிப்படுத்திக் கொள்'' என்று தேற்றிய மாத்யூஸ் அவள் முகத்தை நிமிர்த்திக் கண்களைத் துடைத்து விட்டாள்.

தேற்றிக் கொள்ளக்கூடிய துன்பமா அது? வெளியே கூறினும் யார் அதை நம்புவார்கள்? அந்த எண்பத்திரண்டாவது படுக்கை வீரன் மீர்சடக்கைத் தவிர வேறு யார் கூறியிருந்தாலும் அதை அவள் நம்பியே இருக்க மாட்டாள். அவனுக்கு அவள் ரெசாக்கை மணந்துகொண்டதில் சிறிதும் விருப்பமே யில்லை. ஏனென்றால் தானே அவளை மணந்து கொள்ள அவன் விரும்பினான். தனக்கு அவள் கிடைக்கவில்லை என்பதால் ரெசாக்கின் மேல் அவனுக்குப் பொறாமைகூட இருந்தது. அதனால் ஆரம்பத்தில் ரெசாக்கைப் பற்றி அவன் கூறியதை அவள் நம்ப மறுத்தாள். ஆனால் இறுதியில் நம்பியாக வேண்டிய நிலைக்கு அவள் வந்து விட்டாள். அந்தப் பயங்கரம் நடந்து விட்டது என்பதை உறுதியாக நம்பினாள். அந்த அதிர்ச்சியைத் தாங்கிக் கொள்ளும் சக்தி அவள் உள்ளத்துக்கு இல்லையாதலால் இடி விழுந்த கோபுரம்போல் கலகலத்துப் போனாள்.

சுல்தானாவும் ரெசாக்கும் சந்தித்துக் கொண்டதே புதுமையான முறையில் தான். ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது அது. டாக்கா சர்வகலாசாலையில் பணியாற்றிய பேராசிரியை சுல்தானா, வரலாற்றுப் பெருமை மிக்க தக்ஷ சீலத்தையும், மொகஞ்சதாரோவையும் காண்பதற்காக, மேற்குப் பாகிஸ்தானுக்குக் கல்வி உல்லாசப் பயணமாகத் தன் மாணவிகளோடு ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு சென்றிருந்தாள். மொகஞ்சதாரோவைப் பார்த்து விட்டுத் தக்ஷசீலத்துக்குப் போகும் வழியில் மூல்டானில் தங்கினாள். அவளுடைய மாணவிகள், போகும் வழியில் நதியில் குளிக்க விரும்பியதால் அவர்களை அழைத்துக் கொண்டு நகரத்தின் எல்லையிலிருந்து விலகி, சோலைகள் அடர்ந்த இடமாகப் பார்த்துச் சீனப் நதியில் குளிக்க இறங்கினாள். நதியில் குளித்துப் பழக்கமில்லாத ஒரு மாணவி, சோப்புப் பெட்டியை நழுவ விட்டாள். அதைப் பிடிப்பதற்காகச் சுல்தானா சென்ற போது, ''வேண்டாம் மிஸ்! சோப்புப் பெட்டி போனால் போகட்டும். நீங்கள் வந்து விடுங்கள்'' என்று மாணவிகள் கலக்கத்தோடு தடுத்தனர்.

''நான் பிரும்மபுத்ராவிலேயே நீந்திப் பரிசு வாங்கியவள். பயப்படாதீர்கள்!'' என்று சிரித்த சுல்தானா சோப்புப் பெட்டியைப் பிடிக்க நீரின் போக்கோடு நீந்தத் தொடங்கினாள். அவளை வெகு தூரத்துக்கு இழுத்துச் சென்று வேடிக்கை காட்டிய பிறகுதான் அந்தப் பொல்லாத சோப்புப் பெட்டி அவள் கையில் சிக்கியது!

ஆற்றின் போக்கோடு வந்துவிட்டதால் வரும்போது நீந்துவது எளிதாக இருந்தது. ஆனால் திரும்பிப் போகும் போது ஆற்றின் போக்கை எதிர்த்துக் கொண்டு போகவேண்டியிருந்தது. அது சாத்தியமில்லை, கரையோடு நடந்துவிடலாம் என்று கரையை நோக்கி வந்தாள் சுல்தானா. கரையை நெருங்க நெருங்கத்தான், தான் இருந்த நிலை அவளுக்குப் புரிந்தது! கரையோரமாக இருந்த ஒரு மரத்தின் மறைவிலிருந்து எட்டிப் பார்த்த 'காமிரா'வைக் கண்டதும் சுல்தானா மீண்டும் தண்ணீருக்குள் பாய்ந்தாள். மூச்சைப் பிடித்துக் கொண்டு



## போட்டிக் கதை.௬

நீருக்குள்ளேயே சிறிது நேரம் நீந்தி மீண்டும் தலையைத் தூக்கிப் பார்த்தபோது, "காமிரா"வும் கையுமாகக் கரையோடு பின் தொடர்ந்து வந்திருந்த மீர்சடக் 'கிளிக்' 'கிளிக்'கென்று அவளைப் பல முறைகள் படம் எடுத்துக் கொண்டான்!

அவளுடைய உடையைக் கொண்டே அவன் பாகிஸ்தான் இராணுவத்தைச் சேர்ந்தவன் என்பதை ஊகித்துக் கொண்டாள் கல்தானு. ஆத்திரம் பொங்க, "இராணுவத்தைச்சேர்ந்த நீ இப்படிப்பட்ட நிலையில் இருக்கும் ஒரு பெண்ணைப் புகைப்படம் எடுக்கலாமா? உங்களைப் போன்றவர்களை நம்பிக் கொண்டிருக்கும் நாடு என்ன நிலைக்கு ஆளாகப் போகிறதோ?" என்று வெகுண்டாள்.

அவன் அவளுடைய கோபத்தைச் சிறிதும் லட்சியம் செய்யவேயில்லை. அடுத்துப் படம் எடுக்கப் புதிய பிலிம் ரோலைத் திணித்துக் கொண்டிருந்தான்.

அதே சமயம் அவன் கையிலிருந்த காமிரா பிடுங்கப்பட்டது. "ரெசாக்! காமிராவை ஒன்றும் செய்துவிடாதே. இரண்டாயிரம் ரூபாய் மதிப்புள்ளது அது" என்று மீர்சடக் முன்றுடினன்.

"காமிரா எவ்வளவு ஆயிரம் மதிப்புடையதாக இருந்து என்ன பயன்? நீதான் இதன் மதிப்பை அடிமட்டத்துக்குக் கொண்டு வந்து விட்டாயே....! இராணுவ வீரன் ஒருவன் செய்யக்கூடிய செயலையா நீ செய்திருக்கிறாய்?" என்று ரெசாக் காமிராவை ஓங்கினான்.

"ரெசாக்! நான் செய்தது தவறுதான். அதற்காக எனக்கு என்ன தண்டனை வேண்டுமானாலும் கொடு. ஆனால் காமிராவை ஒன்றும் செய்துவிடாதே!" என்று காலில் விழாத குறையாக அவனிடம் கெஞ்சினான் மீர்சடக். ரெசாக் பதில் ஏதும் கூறாது காமிராவைத் திறந்து பிலிம் சுருளை வெளியே எடுத்துப் பிரித்து வீசி எறிந்தான். பிறகு தயங்கிக் கொண்டே கல்தானுவிடம் வந்தான்.

"சகோதரி! என்னுடைய நண்பனின் இழிவான செயலுக்காக நான் வருந்தி உங்களிடம் மன்னிப்புக் கேட்கிறேன். அவன் எடுத்த படத்தையெல்லாம் அழித்துவிட்டேன்" என்று தரையைப் பார்த்துக் கொண்டே கூறியவன் தன்னுடைய சட்டையைக் களைந்தான். "சகோதரி! ஆபத்துக்குத் தோஷமில்லை. நாங்கள் சென்ற பிறகு இவற்றை அணிந்து கொண்டு நீங்கள் போகலாம். நேராகச் சென்று இடதுபுறம் திரும்பினால் மூல்டானுக்குப் போகும் பஸ்நிறுத்தம் வரும். சட்டைப் பையில் சில்லறை இருக்கிறது" என்று கூறிவிட்டு, கரையில் அவனுடைய கைபெட்டும் தொலைவில் உடைகளை வைத்து விட்டு மீர்சடக்கோடு திரும்பிச் சென்றான் ரெசாக்.

நன்றி கூற வேண்டும் என்பதைக் கூட மறந்த கல்தானு உள்ளாடைகளோடு அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதுதான் அவர்களுடைய முதல் சந்திப்பு. ரெசாக் என்ன எண்ணினானோ தெரியாது. ஆனால் கல்தானு தனக்காகவே அவனும், அவனுக்காகவே தானும் பிறவியெடுத்திருப்பதாகக் கருதிக் கொண்டாள். அவன் கொடுத்த சட்டைப் பையில் சில்லறையோடு ஒரு கைக்குட்டையும், கைக்கடிகாரத்தைப் பழுது பார்க்கக் கொடுத்ததற்கு உண்டான கடையின் ரசீதும் இருந்தன. அந்தக் கடைக்குச் சென்று ரெசாக் வந்தால் தன்னை வந்து காணும்படி கூறிவிட்டு வந்தாள்.

மறுநாள் ரெசாக் அவளைத் தேடிக்கொண்டு வந்தான். அவன் வந்தபோது அவளுடைய அறையில் வேறு யாருமே இல்லை. மாணவிகள் சினிமாவுக்குப் போயிருந்தார்கள். ரெசாக் வரலாம் என்ற எண்ணத்தில்தான் கல்தானு தங்கி விட்டாள். கடிகாரக் கடையின் ரசீதையும், அவனுடைய உடைகளையும் கொடுத்து நன்றி கூறினாள். பதில் நன்றி கூறிய அவன் சட்டைப் பையில் எதையோ தேடி விட்டு, "இதற்குள் ஒரு கைக்குட்டை இருந்ததே! அதை இறந்துவிட்ட என் அன்னையின் நினைவாகப் பல ஆண்டுகளாக உயிருக்கு உயிராகக் காத்து வருகிறேன். எடுத்து எறிந்து விட்டீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை. எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறேன். ஏன், உங்களுடைய உயிரைப் பாதுகாப்பாக வைத்துக் கொள்ளும் தகுதி எனக்குக்கிடைக்கக் கூடாதா?" என்று தன்னுடைய மனத்தைத் தெளிவாகத் திறந்து காட்டினாள் கல்தானு. அவன் திகைப்போடு அவளை நோக்கினான். அவள் தலைகுனிந்தாள். அவளை அவனும் உணர்ந்து கொண்டான்.

"முன்பின் அறியாத என்னிடம், உனக்கு எப்படி இவ்வளவு உறுதியான நம்பிக்கை ஏற்பட்டது?"

"ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்"... "வெற்று நீரின் சுவையை அறிவதற்கு அதை முழுவதுமா குடிக்கிறோம்? ஒரு வாய்

# நைஸில்* 'ஸாண்டல்வுட்'

## உங்கள் மேனியை பத்திரமாக பாதுகாத்து, புத்துணர்ச்சியூட்டுகிறது

உங்கள் மேனிக்கு ஆண்டு முழுவதும் அருமையான பாதுகாப்புத் தரவல்ல விசேஷப் பொருட்கள் அடங்கியது நைஸில் ஒன்றுதான். துர்நாற்றம் வீச செய்யும் கிருமிகளைக் கட்டுப்படுத்தும் குளோர்பென்ஸீன்; வியர்வையை முற்றிலும் உறிஞ்சவென்றே விசேஷ முறையில் உருவாக்கப்பட்ட பவுடர்; சருமத்தில் ஏற்படும் சிறு அரிப்புகளையும் நோய்களையும் தடுக்கிறது. இவற்றோடு... சிந்தை குளிர்விக்கும் சந்தனமணம்... வசந்தப் புத்துணர்வை உங்கள் மீது வாரியிறைக்கிறது!

உங்கள் மேனியை பாதுகாக்கத் தேவையான நன்மருந்துக் குணங்களடங்கிய நைஸில் 'ஸாண்டல்வுட்' பவுடரையே தேர்ந்தெடுங்கள்!




**நைஸில்***

'ஸாண்டல்வுட்'
நன்மருந்து
குணங்களடங்கிய பவுடர்
**க்ளாக்ஸோ** தயாரிப்பு
*ட்ரேட்மார்க்

Sista's-GN-154 TAM

நீர் போதுமே ..... ஆற்றங்கரை நிகழ்ச்சி ஒன்று போதாதா உங்களைப் பற்றி அறிந்து கொள்ள?''

அவன் எழுப்பிய ஒவ்வொரு வினவுக்கும் அவள் தக்கபடி பதிலளித்த விதத்திலிருந்து உணர்ச்சி வசப்பட்டு அவள் அந்த முடிவுக்கு வரவில்லை என்பதை அவன் நன்கு உணர்ந்து கொண்டான். அதற்கு மேல் அவனும் தட்டிப் பேச முடியவில்லை. விரைவில் மீண்டும் சந்திப்பதாகக் கூறி அவளிடம் பிரியா விடை பெற்ருன்.

அடுத்த மாதம் அவள் டாக்காவுக்குச் சென்றதும் ஒரு மாதம் விடுமுறை எடுத்துக் கொண்டு ரெசாக் சென்ருன். இருவரும் இஸ்லாமிய முறைப்படி கணவன் மனைவி யாஞர்கள். ஆண்டுக்கு ஒரு முறையாவது அவன் விடுமுறை பெடுத்துக் கொண்டு மேற்குப்பாகிஸ்தானிலிருந்து கிழக்குப்பாகிஸ்தானி லிருக்கும் டாக்காவுக்கு அவளைக் காணப் பறந்து வருவான். அப்படி அவன் வராத போது பத்து நாட்களுக்கு ஒருமுறை அவன் எழுதும் கடிதம் அவளைத் தேடி வந்து விடும். அவை வெறும் கடிதங்களாக மட்டும் இருக்க வில்லை. அவனுடைய உள்ளக் கோயிலில் அவளை அவன் எவ்வளவு சிறப்பாக வழி பட்டு வருகிருன் என்பதையும், அவனுடைய உடலின் ஒவ்வொரு நாடி நரம்பின் அசைவும் எப்படி அவளைப் பற்றிய நினைவுடனேயே இயங்கிக் கொண்டிருக்கின்றன என்பதையும் அவளுக்கு விளக்கிக் காட்டும் கண்ணுடியாக இருந்தன.

ஒரு பெண்ணுக்கு இதைவிட வேறு என்ன பேறு வேண்டும்? ரெசாக்கைக் கணவனுக அடைந்ததின் பயனுகப் பிறவிப் பயனைப் பெற்று விட்டோம் என்ற பூரிப்பில் கல்தூனு அவனுக்காகவே வாழ்ந்தாள்.

**பா**கிஸ்தான் அதிபர் ஜெனரல் யாஹ்யா கானுக்கு அவர்களுடைய மகிழ்ச்சி பொருமை யைத் தந்திருக்க வேண்டும்! வங்க தேச விடுதலைப் போரை அடக்குமுறை, வன்முறை கொண்டு சமாளித்துவிடப் பார்த்தார். ராணுவத்தை ஏவினர். பல்லாயிரக் கணக் கான பாமர மக்களின் உயிர்கள் பலியாயின. உடைமைகள் பறி போயின. லட்சக்கணக் கான பெண்களின் விலைமதிப்பற்ற கற்பு சூறையாடப்பட்ட செய்தியைப் படித்த போது கல்தூனு கண்ணீர் விட்டாள். இந்தப் பயங்கரச் செயல்களைப் புரியும் இரா ணுவத்தில்தானே ரெசாக்கும் பணி புரிகிருன், அப்படியானுல் இந்தப் பயங்கரச் செயல்களில் அவனுடைய பங்கும் இருக்குமோ என்ற நினைப்பு வந்தபோது கல்தூனுவின் உடல் நடுங்கியது. 'இருக்காது. என் கணவர் பண் பாளர்; பிறர் மனை நோக்காதவர். இந்தக் கொடுமைகளில் அவர்பங்கு கொள்ளவே மாட் டார். இந்தப் பயங்கரச் செயலுக்கு உடந்தை யாக அவர் இருக்கவே மாட்டார்' என்ற நம்பிக்கையில் அவள் மனத்தைத் தேற்றிக் கொண்டு உறுதியாக இருந்தாள்.

பாரதம் பங்களாதேஷை அங்கீகரித்த தைத் தொடர்ந்து பாகிஸ்தானியப் படைகள் பாரதப் படைகளோடு முழு வேகத்தில் போரில் இறங்கின. சிறைப் பிடிக் கப்பட்ட பாகிஸ்தான் வீரர்களில் காய மடைந்தவர்களுக்குச் சிகிச்சை செய்யும் பொறுப்பைச் செஞ்சிலுவைச் சங்கம் மேற் கொண்ட போது, அதில் பங்குகொள்ளக் கல்தூனு வலிய முன்வந்தாள். அங்கேதான் எண்பத்திரண்டாவது படுக்கையில் கழுத்தில் குண்டு துளைக்கப்பட்ட காயங்களுடன் மரணத் தின் பிடியில் தவித்துக் கொண்டிருந்த மீர் சடக்கைச் சந்திக்கும்படி நேர்ந்தது. அவ னிடம் கேட்டால் கணவனைப் பற்றிய நிலையை அறியலாம் என்ற ஆவலில் அவனுக்குச் சுய நினைவு திரும்பிய போது அவளாகவே கேட்டாள்.

அவளை இரக்கத்தோடு நோக்கிய மீர் சடக், ''கல்தூனு!... உன் கணவன் ஜெஸ் சூரில் இறைவனடி சேர்ந்து விட்டான்'' என்ருன்.

கல்தூனு எதிர்பார்த்த செய்திதான். அதனுல் அதைக் கேட்டு அவள் கலங்கவில்லை. அதை மீர்சடக் உணர்ந்து கொண்டான். அவன் இதழ்களில் இரக்கமும், ஏளனமும் நிறைந்த சிரிப்பு நெளிந்தது.

''கல்தூனு...! உனக்குக் கணவனுக வரக் கூடிய தகுதி ரெசாக்குக்கு இல்லை என்று நான் பலமுறை கூறியதை நீ காதில் வாங் கவேயில்லை. என்னை மணந்து கொள்ளுமாறு கெஞ்சியதையும் லட்சியம் செய்யவில்லை. என் காமிராவைப் பிடுங்கிஞன் என்ற ஒரே கார ணத்தால் நீ ரெசாக்கிடம் மயங்கிவிட்டாய். ஆனுல் அவன் இப்போது தன் உண்மை சொருபத்தைக் காட்டிவிட்டான்.''

கல்தூனு அவன் தொடர்ந்து கூறப் போவதைக் கேட்கத் தயாராஞள்.

''ஜெஸ்சூரில் எங்கள் படை வெறியாட் டம் போட்டது. ஒரு பெண்கள் மருத்துவக் கல்லூரியை நாங்கள் பிடித்துக் கொண்டோம். மாணவிகளை, தேவைப்படும்போது எங்கள் உடற்பசிக்கு இலக்காக்கிக் கொள்ள எங்கள் பங்கருக்குள் கொண்டு வந்து சிறை வைத்



### 1+1= தேன் நிலவு

புதிதாகத் திருமணமான ஜோடி ஒன்று தேனி லவுக்காக ஊட்டிக்குப் புறப்பட்டது. ரயில்வே ஸ்டேஷனில் டிக்கெட் கவுண்டரில் கணவன் ஞாபக மறதியாக ''ஊட்டிக்கு ஒரு டிக்கெட்'' என்று கேட்டு விட்டான். பக்கத்திலிருந்த மனைவிக்கு ஒரே கோபம். தன்னை மறந்துவிட்டு அவருக்கு மட்டும் டிக்கெட் வாங்குகிறரே என்று முகம் கோணிஞள்.

கணவன் புத்திசாலி. சட்டென்று சமாளித்துக் கொண்டான்: ''அடடே! உன்னையே நினைத்துக் கொண்டிருக்கிற சந்தோஷத்தில் என்னை மறந்து விட்டேன், பார்!'' என்று சிரித்தான் அவன். -'புவி'

## சரித்திரம் நாறுகிறது!

நான் சில நாட்களுக்குமுன்னர் சோளிங்கர் சென்றேன். பஸ் ஸ்டாண்டுக்கு அருகில், 1783ல் ஹைதர் அலி ஆங்கிலேயர்களுடன் நிகழ்த்திய போரில், மாண்ட வீரர்கள் புதைக்கப்பட்டதாக நம்பப்படும் இடத்தைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தேன். தமிழ்நாடு அரசின் பாதுகாப்பிலுள்ள அந்நினைவாலயம், மறைவிடமாகப் பயன்படுத்தப் படுகின்றது. துர்நாற்றம் பொறுக்க முடியவில்லை. நாட்டின் விடுதலையில் உயிர்நீத்த உத்தமர்களுக்கு அளிக்கும் மரியாதை இதுதானா? இதுபோன்ற சரித்திர நினைவாலயங்கள் சிறந்த முறையில் பாதுகாக்கப்படுவதில் அரசு கவனம் செலுத்தட்டும்.

சென்னை — 83, 20—8—74 என். கிருஷ்ணமூர்த்தி



திப்புவுக்கு ஸ்டாம்பு வெளியிட்டதுடன் கடமை தீர்ந்ததா?

---

தோம். அந்த வசதியை அதிக அளவில் பயன்படுத்திக் கொண்டவன் ரசாக்தான்.''

பூமியே பெயர்ந்து தன்னை விழுங்கி விட்டதைப் போன்ற பயங்கரத் தோற்றம் ஏற்பட்டது கல்தானாவுக்கு. ''கல்தானா! நான் கூறியது உண்மை. மரணப்பிடியில் இருக்கும் போது பொய்யைக் கூறுவேனா?''

அதற்கு மேல் நிற்கக் கல்தானாவால் இயலவில்லை. அதிர்ந்துபோனவளாகத் திரும்பினாள்.

சுதந்திர பங்களா தேசம் உருவானதைத் தொடர்ந்து சீரமைப்புப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. பாகிஸ்தான் இராணுவத்தின் கொடுமைக்கு இலக்காகிப் பெண்மையைப் பலி கொடுத்த மகளிர்களுக்கு இரண்டு லக்ஷம் என்ற மதிப்பீட்டைத் தொடர்ந்து அவர்களுக்குப் புகலிடம் அளித்துச் சமூகத்தின் வெறுப்பிலிருந்து அவர்களையும், பலாத்காரத்தின் சின்னமாக அவர்களிடையே உருவாகிக் கொண்டிருக்கும் குழந்தைகளையும் காத்து ஆதரவு கொடுக்க ஓர் இயக்கமே நடத்த முன்வந்தார் அறுபத்தோரு வயது மூதாட்டியான அன்னை தெரஸா. மனிதாபிமானப் பணிகளிலேயே ஊறிப்போன அந்த மூதாட்டி விடுத்த உருக்கமான வேண்டுகோளைப் படித்ததும் நைந்து போயிருந்த கல்தானாவின் உள்ளத்திலே புதிய ஊக்கம் பிறந்தது.

அன்னை தெரஸா தொடங்கியுள்ள இயக்கத்தில் தானும் பங்கு கொண்டால் என்ன? ரசாக்கைப் போன்ற கயவர்கள் இழைத்த கொடுமையின் விளைவுகளைத் தாங்கிக் கொள்ளத்தானே இந்த இயக்கம் நடத்தப்படுகிறது? அன்னை தெரஸாவின் இயக்கத்துக்கு கல்தானா தன்னையே காணிக்கையாக்கிக் கொண்டாள். மனத் துயர் குறைந்தது. நாட்களும் ஓடின.

அன்னை தெரஸாவின் இயக்கத்துக்குப் பெரிதும் உதவியாக இருந்த வங்காளி இந்து டாக்டர் ஒருவர் தம் மகளுக்குத் திருமணம் செய்தார். கல்தானாவுக்கும் அழைப்பு வந்தது. அதனால் அவளும் சென்றிருந்தாள். திருமாங்கல்யத்தை அணிந்து கொண்ட மணப்பெண், தன்னுடைய பெற்றோர்களைக் கூட வணங்காது, பூஜை அறைக்குள் சென்றதைப் பார்த்தாள் கல்தானா.

பூஜை அறையில் அலங்காரம் செய்யப்பட்ட இரு விளக்குகளுக்கு இடையே கையால் வரையப்பட்ட மிகப் பெரிய ஓவியம் ஒன்று மாலையணிவித்துக் காணப்பட்டது. மணப்பெண் தன் கணவனோடு அதற்கு வணங்கி விட்டுக் கரம் கூப்பிக் கண்ணீர் விட்டாள்!

மின்னலடித்தது போன்ற உணர்வு கல்தானாவுக்கு. அருகே சென்று பார்த்தாள். சந்தேகமே இல்லை. அந்த ஓவியத்தில் இருந்தது ரசாக்தான்! ஆவலை அடக்கிக்கொண்டு பொறுமையோடு காத்திருந்து மணப்பெண்ணைத் தனியாக அழைத்துக் கேட்டாள்.

''சிஸ்டர்! இந்தத் திருமணம் நடைபெறுவதே இவருடைய கருணையால்தான். அப்பொழுது நான் ஜெஸ்ஸூரில் பெண்கள் விடுதியில் தங்கிப் பட்டப் படிப்பு படித்துக் கொண்டிருந்தேன். பாகிஸ்தான் இராணுவத்தினர் எங்கள் விடுதியைக் கைப்பற்றினார்கள். தேவைப்படும் போது தங்கள் உடல் பசிக்கு இரையாக்கிக் கொள்ளும் எண்ணத்தோடு எங்களையெல்லாம் தங்களுடைய பங்கருக்கே கடத்திச் சென்று சிறை வைத்தார்கள். ஆனால் உயர் அதிகாரி என்ற முறையில் வேறு யாரையும் எங்களை அண்டவிடாமல் தடுத்து, இவர் மட்டுமே எங்களை நாடி அடிக்கடி வந்தார். அடிக்கடி எங்களிடம் வந்தாலும் ஒரு பெண்ணிடம் கூட முறைதவறி நடக்கவில்லை. 'உங்களை இங்கிருந்து தப்பிச்செல்லவைக்கவே வந்திருக்கிறேன். எனக்குத் திருமணமாகி விட்டது. என்னை உயிராக நேசிக்கும் மனைவி இருக்கிறாள். அவளுக்கு நான் கனவில் கூட துரோகம் இழைக்க மாட்டேன். என்னோடு ஒருவர் வாருங்கள். அழுது புரண்டு கொண்டு விருப்பமில்லாது வருவது போல் நடித்து, நான் இழுக்கும் இழுப்புக்கு வாருங்கள். வெளியே தனியான இடத்துக்குச் சென்றதும் அப்பெண்ணுக்கு விடுதலையளித்து விடுகிறேன். என்னுடைய பலாத்காரத்துக்குப் பலியாகி விட்டதைப் போல் அலங்கோலமாக்கிக் கொண்டு அழுது சாபமிட்டு எங்கேயாவது ஓடித் தப்பித்துக் கொள்ளலாம்' என்று எங்களுக்கு ஒரு வழிகாட்டினார். அதன்படி பல பெண்கள் தப்பித்துக் கொண்டோம். அவர்களில் நானும் ஒருத்தி. இந்த ஓவியத்தை நானே ஞாபகத்திலிருந்து வரைந்தேன். என்னைப் பொறுத்தவரை இவர் மனித உருவில் வந்த தெய்வப் பிறவி. இந்த மனித தெய்வத்துக்கு மனைவியாகும் பேறு எந்தப் புண்ணியவதிக்குக் கிடைத்திருக்கிறதோ? அவள் எங்கேயிருக்கிறாளோ?'' என்று உணர்ச்சிப் பெருக்கில் கண் கலங்கினாள் மணப்பெண்.

பிறவிப் பயனை மீண்டும் பெற்றுவிட்ட பேரானந்தத்தில் அந்தத் தெய்வ மகனின் ஓவியத்தை நோக்கியபடி கண்கள் பனிக்க நின்றாள் கல்தானா.

வாழ்க்கையில் சந்தோஷமளிக்கும் பல தருணங்கள் ஏற்படுகின்றன

# தலைவலி-உங்கள் சந்தோஷத்தை கெடுக்க விடாதீர்கள்

## 2 ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்




ASPRO
Nicholas

மைக்ரோஃபைன் ஆஸ்ப்ரோ வலியை அதிவேகமாக வெளியே இழுத்து விடுகிறது

A.G.62.TM

எமது இரு புதிய தயாரிப்புகள் :—

சாலச்சிறந்தது !!

ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் Dhideerex (FOR INSTANT PREPARATION) 'திடீரெக்ஸ்'




# திடீர் மதராஸ்

# சாம்பார் கேக்

# ரசம் கேக் (இரு தனிக் கேக்குகள்)

**சாமான் விலைகள் ஏறியுள்ளதால் இவைகளை உபயோகிப்பது மிக சிக்கனமானது**

# திடீர் அரிசி இட்லி கேக்

*மற்றும் எமது இதர தயாரிப்புகள்*

சாம்பார் பவுடர்
ரசப் பவுடர்
கறி பவுடர்
மஞ்சள் பொடி
மிளகாய்ப் பொடி
கொத்தமல்லிப் பவுடர்
இட்லி மிளகாய்ப் பொடி
பருப்புப் பொடி
புளியோதரைப் பொடி
திடீர் –
தக்காளி சாம்பார் பவுடர்
,, ரசப் பவுடர்
,, சூப் பவுடர்
,, மிளகு மசாலா பவுடர் *(பாலுடன் சேர்க்க)*
மிளகு ரசப் பவுடர்

அரிசிதோசை மிக்ஸ்
போண்டா மிக்ஸ்
பஜ்ஜி மிக்ஸ்
காஞ்சிவரம் இட்லி மிக்ஸ்
அடை மிக்ஸ்
ரவா உப்புமா மிக்ஸ்
மைசூர் உப்புமா மிக்ஸ்
மதராஸ் சேமியா/இடியாப்பம்/
சேவை மிக்ஸ்
அப்பளம், பப்படம்
வடாம் & வத்தல்கள் *(12 ரகங்கள்)*
ஊறுகாய்கள் *(12 ரகங்கள்)*
சட்னி மற்றும் தொக்கு வகைகள் *(5 ரகங்கள்)*

*தயாரிப்பாளர்கள் :* **R. S. N. அய்யர் & R. S. G. அய்யர்**

*விவரங்களுக்கு :*

# ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.

46, தம்பு செட்டித் தெரு. (போன் : 20401) சென்னை - 600001

*தயாரிப்பு முறைகளை உருவாக்கியவர்கள் :*

## ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிட்டிகல் லாபரட்டரீஸ்

சென்னை - 600001

( போன் : 26393 )

கார்பன் பரிசோதனை, உணவுக் கலப்பட சட்டத்தின்படி உணவுப் பொருள்கள் மற்றும் தண்ணீர் ஆகியவைகளும் மிதமான கட்டணங்களில் பரிசோதனைக்கு ஏற்றுக்கொள்ளப்படும்.

R. N. ரமணி, B. Sc., F. I. C. S. *(உரிமையாளர் & டைரக்டர்)*






● 1. எத்தகைய உடை, தீப்பிடிக்க எவ்வளவு நேர மாகும்? இந்தப் புதுமையின் ஆடையில் தீ பரவு வதைக் கடிகாரத்தைக் கொண்டு கணிக்கிறார்கள் ஆராய்ச்சியாளர்கள்.

● 2. தீப்புண் சிகிச்சை.

படங்கள் உதவி : விபத்து மருத்துவமனை, பர்மிங்ஹாம்.

ஒரு பள்ளிக்கூடப் பெண் குழந்தை. மழலைப் பாடல். ரோஜாக் கன்னம். பளபளக்கும் ஆடை. ஆண்டு விழா நிகழ்ச்சி. எரியும் மெழுகுவத்தி நாட்டியம். சற்றே கவனப் பிசகு. மின்னலெனப் பொசுங்கும் உடை. வேதனை, துடிதுடிப்பு. குடும்பத்தில் மீளாத் துயர். சூனிய எதிர்காலம் !

''இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள். இதில் மேலும் வேதனை என்னவென்றால் தீ விபத்துக்கள் பலவும் அஜாக்கிரதை காரணமாக நேர்வனவே'' என்று கூறுகிறார் டாக்டர் விஷ்ணு சர்மா. பெண்கள் நோயிலும் பிரசவச் சிகிச்சையிலும் நிபுணரான டாக்டர் விஷ்ணு பிரிட்டனில், பர்மிங்ஹாம் நகரில் உள்ள விபத்து மருத்துவ மனையில் தீக்காயச் சிகிச்சைப் பிரிவில் சில காலம் பயிற்சி பெற்றுப் பணியாற்றியவர்.

அபாயமான விபத்துக்கள் பல தொழிற்சாலைகளில் நிகழ்வதில்லை, வீடுகளில்தான் நேர்கின்றன! தொழிற்சாலைகளில் அபாயத் தடுப்பு விதிகளும் வேலை முறைகளும் பல உள்ளன. பத்திரமான வீடு என்று நாம் கருதும் இடமோ விபத்துக்களமாகி விடுகிறது! ஆயிரம் தீ விபத்துக்களை அலசிப் பார்த்தால் இதில் கால்வாசிப் பேர் குழந்தைகளாக இருக்கக் காணலாம். பெரும்பாலும் அற்ப அஜாக்கிரதையால் நேர்ந்த விபத்துக்கள்.

வெட்டுக் காயமானால் காயம் கூடும், ஆறும். தீப் புண்ணிலோ உயிரணுக்களான 'செல்'கள் பொசுங்கி நாசமாகிவிடுகின்றன. சுலபத்தில் ஆறாது. சித்திரவதைதான்.

ஒரு தீ விபத்து எவ்வளவு 'சீரியஸ்' ஆனது என்பது மேனியின் பரப்பில் எவ்வளவு பாகம் பாதிக்கப்பட்டது என்பதைப் பொறுத்தது. முழு மேனிப் பரப்பில் பத்திலொரு பாகம் வரை பாதிக்கப்பட்டிருந்தால் பரவாயில்லை. மிகையானாலும் கவலைதான். மற்றொரு விசித்திரம்: பொசுங்கிய பகுதி மேலோடு இருந்தால்தான் எரிச்சல் அதிகம் இருக்கும். தோல் ஆழமாக எரிக்கப்பட்டிருந்தால் உணர்ச்சி நரம்புகளும் ஓரளவு பாதிக்கப்படுவதால் எரிச்சல் உணர்ச்சி அதிகம் தெரியாது! எவ்வளவு சோக மயமான விசித்திர உண்மை இது !

தீப் புண் ஆறுவது மிக மெதுவாக நடைபெறும் செயல். மேனித் திசுக்கள் எவ்வளவு ஆழம் பாதிக்கப்பட்டிருக்கிறதோ, அதைப் பொறுத்துக் குணமாகும் காலமும் நீடிக்கும். நோயாளி, மருத்துவர், உறவினர் அனைவரது பொறுமையையும் சோதிக்கும். குணமாகும் போது தசைத் திசுச் சுருக்கமும் ஏற்படுவதால் சில்லறை உபாதைகளும் நேரலாம். உதாரணமாகக் கழுத்திலே பெரும் தீக்காயம் குணமாகும்போது தலை நிமிர்த்துவதே முடியாது. இந்தக் குறையைச் சீராக்க பிளாஸ்டிக் சிகிச்சை தேவைப்படும். அழகுத் தோற்றத்தை மிகவும் பாதிக்கும் அளவு மோசமான காயமானாலும் பிளாஸ்டிக் சிகிச்சை செய்யப்படுகிறது. புண் ஆறும் போதே உடலின் வேறு பகுதியிலிருந்து சருமத்தை இலேசாகப் பிய்த்துப் புண்ணில் ஒட்ட வைப்பதுதான் 'பிளாஸ்டிக்' சிகிச்சை. இது செலவு மிக்க சிகிச்சை.

தீ விபத்து நேர்ந்ததும் என்ன செய்ய வேண்டும் ? காயம்பட்டவரோ அருகில் இருப்பவரோ, பதறாமல், நிதானம் இழக்காமல் செயல்பட வேண்டியது முக்கியம். தீ பரவுவதைத் தடுக்க உடலையொட்டிக் கெட்டி



சசிகுமார், அவரது மனைவி சசிகலா ●



ஜஹாங்கீரின் மூத்த மைந்தன் குஸ்ரு. தந்தைக்கு எதிராகக் கிளர்ச்சி செய்த குற்றத்துக்காக மகனின் கண்களைக் குருடாக்கும்படி ஆணையிட்டார் ஜஹாங்கீர். இந்தக் கொடிய தண்டனையைத் தனக்குத் தானே தன் கையாலேயே விதித்துக் கொள்வதாக மன்றாடிக் கேட்டுக் கொண்டான் குஸ்ரு. அவனிடம் ஒரு நீண்ட ஊசியும் தீப்பந்தமும் கொடுக்கப்பட்டன. அது மட்டுமல்ல; கண்ணிலே பழுக்கக் காய்ச்சிய ஊசியை எப்படிச் செலுத்திக் குருடாக்குவது என்ற கலையையும் ஆஸ்தானக் கொல்லாளி இளவரசனுக்குக் கற்பிக்கும்படி சொல்லப்பட்டான். அத்துடன் ஓர் ஊசியும் நூலும் கூடக் கொடுக்கப்பட்டன. இளவரசனை இந்த உபகரணங்களுடன் ஓர் அறைக்குள் தள்ளி மூடிப் பலத்த காவல் போட்டார்கள். அடுத்த நாள் குஸ்ரு வெளியே கொண்டு வரப்பட்டபோது அவனது பார்வையற்ற இரு விழிகளும் ஊசி நூல் கொண்டு தைக்கப் பட்டிருந்தன. இளவரசன் தனக்குத் தானே தண்டனை விதித்துக் கொண்டு விழியற்ற கண்களின் கோரத்தைப் பிறர் பார்க்காதபடி இமைகளைச் சேர்த்துத் தைத்துக் கொண்டு விட்டதாக மன்னரிடம் அறிவிக்கப்பட்டது. கொஞ்ச நாளைக்கெல்லாம் தம் மூத்த மகனுக்குத் தாம் வழங்கிய கொடூரமான தண்டனையை எண்ணி மனம் நொந்த மன்னர், நாட்டில் உள்ள மிகச் சிறந்த வைத்தியர்களை வரவழைத்து மகனுக்கு மறுபடியும் இழந்த பார்வையை மீட்டுத் தர முடியுமா என்று பார்க்குமாறு பணித்தார். வைத்தியர்கள் மிகக் கவனமாகக் குஸ்ருவின் இமைத் தையல்களை அகற்றினர். என்ன ஆச்சரியம்! குஸ்ருவின் விழிகள் சேதமடையவேயில்லை! பழுதுபடாமல் அப்படியே இருந்தன. குஸ்ரு தன் விழிகளைக் காய்ச்சிய ஊசி கொண்டு குத்திக் கொள்ளவே இல்லை! வெறுமனே இமைகளை மட்டும் சேர்த்து தைத்துக் கொண்டு மன்னரை ஏமாற்றி விட்டான்! கொஞ்ச நாட்களில் அவன் கண்கள் பழையபடி காணும் சக்தியைப் பெற்று விட்டன. இந்தக் குஸ்ருவின் சகோதரர்தான் உலகப் புகழ் பெற்ற தாஜ்மகாலைக் கட்டிய ஷாஜஹான். குஸ்ரு பட்டத்துக்கு வராதது வேறு கதை! - கௌசிகன்

யான போர்வை, கோணி, கம்பளி என்று எதையாவது அழுத்தச் சுற்றிவிட வேண்டும். தண்ணீர் ஊற்றக் கூடாது.

தீக் காயத்தால் ரத்த நுண் குழாய்கள் சேதமடைந்துவிட, ரத்தம் இழப்பதாலும் அதிர்ச்சியும் மயக்கமும் நேரலாம்.

காயத்தின் மீது எண்ணெய் தடவுவது, எரிச்சலுக்கு மாற்று என்று இங்கியைப் பூசுவது எல்லாம் தவறு. புண் ரணமாகிவிடாமல் இருக்கச் சுத்தமான துணியால் மூடினாலும் போதும். அல்லது அவசரத்துக்கு ஏதாவது செய்திப் பத்திரிகைத் தாளை எடுத்துச் சற்றே சூடாக்கி, ரண காயத்தின் மீது சுற்றினால் அது கூட ஒரு முதல் உதவியாகும். பிறகு முறையான சிகிச்சைக்கு விரைய வேண்டும்.

சூடான எண்ணெயோ கொதிக்கும் நீரோ பட்டுவிட்டால் அந்த இடம் கொப்புளித்துவிடுகிறதே, அந்தக் கொப்புளங்களை அழுக்கான ஊசியோ பின்னோ கொண்டு குத்தினால் விபரீதம் ஏற்படும். மருத்துவ உதவி பெறுவதே நல்லது. தீக் காயமும் ரணங்களும் அழுக்காலும் அஜாக்கிரதையாலும் மோசமாகும்.

அனைவரும் கவனத்தில் கொள்ளவேண்டிய பாதுகாப்பு அம்சங்கள்:

திறந்தபடி எரியும் காடா விளக்கு, சிம்னி விளக்கு ஸ்டவ் போன்றவற்றின் அருகே வசவச என்று பொருள்கள் இருக்கக் கூடாது. ஒரு குடிசையில் நிலவும் அஜாக்கிரதையால் ஒரு சேரியே அழிந்து விடுகிறது.

சமையல் வேலையில் ஈடுபடும்போது தொளதொள என்று ஆடைகள் தழையத் தழையத் தொங்குவது ஆபத்து; அடுப்புக்குப் பின்னால் வைத்துள்ள பொருள்களை எட்டி எடுப்பதும் சரியல்ல. சமைக்கும்போது நைலான் போன்று எளிதில் தீப்பிடிக்கும் உடை அணிவது நல்லதல்ல. உடுத்திய புடவைத் தலைப்பைப் பிடி துணியாகக் கருதுவது ஆபத்தான சிக்கனம். கிரசின் ஊற்றி எரியும் அடுப்பில், எரிந்துகொண்டிருக்கும் போதே, எண்ணெய் ஊற்றுவது ஆபத்தை வரவேற்பதாகும்.

'தீபாவளி நெருங்குகிறது; எச்சரிக்கை தேவை' என்று பெற்றோர்களுக்குக் கூறலாம். ஆனால் ஆண்டு முழுதும் அணைக்காமல் வீசப்படும் சிகரெட் துண்டங்கள் எத்தனை சேதங்களுக்குக் காரணம்!

இதையெல்லாம் கருதித்தான் டாக்டர் விஷ்ணு சர்மா கூறுகிறார்: "நமது பொது மக்களுக்கும் குழந்தைகளுக்கும் தீ விபத்தின் கோரத்தையும் அது நேரும் வாய்ப்புக்களையும் தவிர்க்கும் மார்க்கங்களையும் பற்றித் திரும்பத் திரும்பச் சொல்ல வேண்டும். பத்திரிகை வாயிலாகவும், திரைப்படம், ரேடியோ, டெலிவிஷன் போன்ற சாதனங்களைக் கொண்டும் பிரசாரம் செய்ய வேண்டும். அண்மையில் திரைப்பட நடிகர் சசிகுமாரும் அவர் மனைவியும் தீ விபத்தின் காரணமாக மரணமடைந்தபோது பட உலகமே பதறிப் போய் விட்டது. பட அதிபர்கள் முனைந்தால் தீ விபத்து தடுப்புப் பிரசாரத்துக்காகவே ஒரு டாகுமெண்டரி எடுக்கலாம். அதுவே சசிகுமாரின் நினைவுக்கு ஓர் அஞ்சலியாகும்."

— பேட்டி: தம்பி சீனிவாசன்

## நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

# புதிய டெண்டெர் கேர்




பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர்!

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவுந்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெறும் பேறு.' எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்— டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனல் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது.' அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்— எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

CTC.G.I.TM

டாக்டர்கள் கூறுகிறார்கள்:

# 3 மாதங்கள் ஆன பிறகு, முழுமையான உடல் வளர்ச்சி பெற உங்கள் குழந்தைக்குத் தேவை திட உணவு.



**பாரெக்ஸ்**

உங்கள் குழந்தை சீராக வளர்ந்திட அனைத்தையும் அளிப்பதைப் பாருங்கள்: எளிதில் சீரணிக்கக்கூடிய புரதம். கூடவே வைட்டமின், கால்ஷியம், இரும்புச் சத்து மற்றும் கார்போஹைட்ரேட்.

3 மாதங்கள் முதல் 3 ஆண்டுகள் வரை உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு அவசியம் பாரெக்ஸ்.

| குழந்தையின் வயது | பாரெக்ஸ் அளவு |
|---|---|
| 3 – 6 மாதங்கள் | 1 – 2 தேக்கரண்டியளவு – தினம் இருமுறை |
| 6 – 9 மாதங்கள் | 3 – 4 தேக்கரண்டியளவு – தினம் மூன்று முறை |
| 9 மாதங்கள் – 3 ஆண்டுகள் | 4 – 6 தேக்கரண்டியளவு – தினம் நான்கு முறை |



உங்கள் பாரெக்ஸ் புத்தகத்தை இலவசமாகப் பெற, 25 பைசா தபால் தலை இணைத்து எழுதுக:
டிபார்ட்மெண்ட்-1, த.பெ. 16558, பம்பாய் 400 025
(எந்த மொழியில் வேண்டுமென்று தெரிவிக்கவும்).

**பாரெக்ஸ்®**

கிளாக்ஸோ தயாரிப்பு



சீரான உடல் வளர்ச்சிக்குக் குழந்தையின் முதலாவது திட உணவு

CMGF-42-104 TM




# ஆலயம் – அமெரிக்கா – அதிரசம்

பி.வி.ஆர்.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன், ஆர்தர் கேஸ்லர் எனும் ஜெர்மன் எழுத்தாளர் காஞ்சிப்பெரியவாளிடம்கேட்டார்: ''கிறிஸ்துவ இஸ்லாமிய ஆலயங்களில் காணப்படும் அமைதியும் நிசப்தமும் ஏன் ஹிந்துக் கோயில்களில் இல்லை? வழிபட வந்த இடத்தில் நிசப்தம் நிலவ வேண்டாமா?''

பெரியவாள் வெகு அழகாகப் பதில் சொன்னார்.

''குடும்பத் தலைவன் மாலையில் காரியாலயத்திலிருந்து வீடு திரும்பும்போது அவனுடைய குழந்தைகள் அவனுடைய காலைக் கட்டிக்கொண்டும், முதுகில் ஏறிக்கொண்டும் விளையாடுகின்றன. ஹிந்துக் கோயில்கள், தெய்வம் என்கிற தந்தையுடன், பக்தர்கள் என்ற குழந்தைகள் சந்தோஷமாகப் பொழுதைப் போக்க அமைந்த இடங்கள். வழிபாடு, வீட்டிலே பூஜை அறையில் நடக்கிறது.''

கோயிலுக்குச் செல்லுகிறவன் கர்ப்பக்கிருகத்துக்கு முன்னால் பாடுவதையும், மணி அடித்து ஆரவாரம் செய்வதையும் தீப ஆராதனைகளின்போது பக்தர்கள் தம்மையும் மீறி, 'ஹரஹர மகாதேவா', 'ஈசுவரா', 'அம்மா தாயே' என்று முறையிடுவதையும்தான் பெரியவாள் குறிப்பிட்டார் என்பது தெளிவு.

கடந்த சில ஆண்டுகளாகக் கோவில்களுக்குச் செல்லுகிறவனுக்கும், கடற்கரைக்குப் போகிறவனுக்கும் அதிக வித்தியாசமில்லாமற் போய்விட்டது. கிரிக்கெட் மாட்ச், அடல்ட்ஸ் ஒன்லி படம், வாட்டர்கேட் இன்னும் எவ்வளவு எவ்வளவோ விஷயங்களை வெளிப்பிராகாரம், உட்பிராகாரம் என்று பாராமல் அலசித் தீர்க்கிறார்கள்.

ஒரு பிரதோஷ நாள். கபாலீசுவரர் கோவில். இரண்டு வயது முதிர்ந்த ஸ்திரீகள் அம்மன் சந்நிதிக்குச் சற்று வெளியே பேசிக் கொண்டிருந்தார்கள்.

''அமெரிக்காவிலே இருக்கிறது உன் மூத்த பிள்ளையா, ரெண்டாம் பிள்ளையா?''

'' ரெண்டாம் பிள்ளை. பொண்ணும் புருஷனோடே அமெரிக்காவிலேதான் இருக்கான்.''

''பொண்ணு ஸ்நானம் பண்றாளா?''

''அதைப் பத்தி ஒண்ணும் எழுதலே.''

கோயிலுக்கும் தெய்வத்துக்கும் பக்திக்கும் சம்பந்தமில்லாத விஷயங்கள் சரளமாக வந்து கொண்டிருந்தன. அமெரிக்காவில் இருக்கிற பெண்ணின் ஸ்நானம் அம்மன் சந்நிதிக்கு எதிராகவா விசாரிக்கப்பட வேண்டும்?

கோவில்களில் இப்போதெல்லாம் லட்டு, அதிரசம், தேன்குழல் என்று விற்கிறார்கள். ஸ்வாமிக்கு நைவேத்தியம் பண்ணினது என்று வேறு சொல்கிறார்கள். இந்தத் தின்பண்டங்கள் காலையிலிருந்து மாலை வரை ஓட்டல் மாதிரி விற்கப்படுகின்றன. யார் நைவேத்தியம் செய்து விற்கிறார்கள்? தேவஸ்தானமா, அரசின் அறநிலைய இலாகாவா?

தேன்குழலையும் அதிரசத்தையும் கடித்துக் கடித்துத் தின்றுவிட்டு விரல்களில் ஒட்டிக்கொண்டிருக்கும் எண்ணெயைச் சிற்பத் தூண்களில் தேய்த்து விட்டுப் போகும் பக்தப் பெருமக்களைப் பார்க்கும் போது,அவர்கள்மீதுகூட அவ்வளவாக ஆத்திரம் ஏற்படுவதில்லை. இதற்கெல்லாம் மூலகாரணமாக இருக்கிறார்களே, அவர்கள்மீதுதான் ஒரு வெறுப்பு ஏற்படுகிறது.

அதிரசமும் தேன்குழலும் இன்னின்ன விலை என்பதாக ஒரு விலைப் பட்டியலைக் கூடக் காணலாம். ஹோட்டலா கோயிலா என்று பலருக்கு மனம் சங்கடப் படுகிறது, இதைப் பார்த்து.

இம்மாதிரி வியாபாரங்களும் இரைச்சலும் பெரும்பாலும் பெரிய பெரிய கோயில்களில்தான் காணப்படுகின்றன. சிறு கோயில்களில் இடமும் இல்லை, அதிக கூட்டமும் இல்லை.

கேரளக் கோயில்களில் இப்படிப்பட்ட பிரச்னைகளே கிடையாது. தொழ வருகிறவர்கள் தொழுது விட்டு ஈர ஆடையுடன், யாரிடமும் பேசாமல் போய்விடுகிறார்கள். துப்புரவான பிராகாரங்களில் அவர்கள் கால் வைக்குமுன் காலைக் கழுவிக் கொள்ளுகிறார்கள். அதற்கென்றே பல கோயில்களுக்குப் பக்கத்திலேயே ஒரு சிறு குளமோ கிணறோ இருக்கிறது.



கோயில்களில் 'அமைதியாக இருங்கள்' என்று யாரும் பலகையில் எழுதி மாட்ட வேண்டியதில்லை. சினிமா, நாடகம் பார்த்துக் கொண்டிருக்கையில் இருக்கிற கவனம், சிரத்தையை விடப் பல்லாயிரம் மடங்கு கோயில்களில் இருக்கும் போது கொள்ள வேண்டும்.

இந்தச் சிரத்தையும் கவனமும் இல்லாவிடில் சந்நிதியில் நிற்பதிலேயே அர்த்தமில்லை.

# இலவசம்!




## புத்தம் புதிய போர்ஹென்ஸ் புத்தகம்—'பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'.

இந்த விவரமான வண்ணப் புத்தகத்தை இலவசமாகப் பெறுங்கள்! இன்றே இக் கூப்பனை அனுப்புங்கள்.

மானேஜர், டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை எண் 10031, பம்பாய் 1.

''பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை'' என்னும் போர்ஹென்ஸ புத்தகத்தின்* ஒரு பிரதியை இலவசமாக எனக்கு அனுப்பவும். தபால் செலவுக்காக 25 காசு தபால் தலை அனுப்பியுள்ளேன்.

பெயர் ______________________ வயது ________ K.6.BA

முகவரி ______________________________________

______________________________________

*எந்த மொழியில் புத்தகம் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராட்டி, குஜராத்தி, உருது, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம் அல்லது கன்னடம்.

**போர்ஹென்ஸ்** பல் வைத்தியர் ஒருவரால் உருவாக்கப்பட்ட பற்பசை

100F-152 TAM



## அன்புத் தங்கை

தமிழகத்தில் வரலாறு காணாத அதிசயம். ஒரு கவிதைத் தொகுப்பு ஏராளமாக விற்பனையாகிக் கவிஞனுக்குப் பெரும் புகழும் பெற்றுத் தருகிறது! ஆனால் அதிலும் ஓர் ஏமாற்றம். புகழும் பணமும் உரியவனுக்குப் போய்ச் சேரவில்லை. கவிஞன் ராமு தான் இயற்றிய கவிதைகளையெல்லாம் தன் நண்பன் ஸ்ரீராமுக்கே உரிமையாக்கிவிட்டதுதான் காரணம்! ராமுவின் கவிதைகளால் ஸ்ரீராம் பணக்காரனாகிறான். ராமு தன் தங்கையை ஸ்ரீராமுக்கே மணம் முடித்து வைக்கிறான். கவிஞனின் அமர காவியங்களை ரசித்து வந்த கல்லூரி மாணவி ராதாவும் ஸ்ரீராமையே காதலிக்கத் தொடங்கிவிடுகிறாள். அப்புறம், படத்தில் சந்தேகம், குழப்பம், சூழ்ச்சி எல்லாம் உருவாகி விடுகின்றன. கவிஞனின் கவர்ச்சியில்லாத தோற்றம்தான் திரைக் கதையின் கரு. ராதாவாக வரும் ஜயலலிதாவும் கவிஞனாகவரும் முத்துராமனும் மிகவும் திறம்படப் பொறுப்பை நிறைவேற்றியுள்ளார்கள். ராமு, ராதாவிடம் தன்னைக் கவிஞன் ஸ்ரீராமின் உதவியாளன் என்று சொல்லிக்கொள்ளும் இடத்தில் நம் உள்ளங்களைத் தொட்டு விடுகிறார். ஸ்ரீகாந்த், ஸ்ரீராம். அடுத்துக் கெடுக்கும் வில்லன். சொல்லித் தர வேண்டுமா அவருக்கு? சிரிக்கமாட்டேனென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் 'உம்மணாமூஞ்சி' ரசிகர்கூட, தங்கவேலுவைப் பார்த்ததுமே 'பக்'கென்று சிரித்து விடுவார். ஜெயா, கவிஞன் ராமுவின் தங்கை கீதா பாத்திரத்துக்கு மெருகேற்றியிருக்கிறார்! பி.குகநாதன் சில புதுமையான அம்சங்களைக் கதையில் புனைந்திருக்கிறார். எஸ். பி. முத்துராமனின் டைரக்ஷன் படத்துக்குத் தனிச் சிறப்பளித்திருக்கிறது. ''பாசமலர்''லிருந்து கணக்கிட்டுப் பார்த்தால், (இல்லை, அதற்கு முன்னாலும் கூட) எத்தனையோ அண்ணன், தங்கைகள் திரையில் வந்துவிட்டனர். ''அன்புத் தங்கை''யும் ஒருத்தி!



# முருகன் காட்டிய வழி

நம்ப முடியாத திரைக்கதை. யாரோ ஒருவனை எவனோ ஒருவன் கொலை செய்து விட்டு நடுரோட்டில் போட்டுவிட்டு ஓடிப் போக, அப்பழி, அப்பாவி சைக்கிள் ரிக்ஷா டிரைவர் மீது விழப்போக, அந்த அப்பாவி முருகன் கோவிலுக்குள் புகுந்துகொண்டு ஊரிலுள்ள குழந்தைகளையெல்லாம் தான் முருகன் அவதாரம் எனக் கூறி ஏமாற்றுகிறான். இந்த அசட்டுத்தனத்தை எப்படி நம்புவதோ தெரியவில்லை. எப்படியெல்லாமோ வளைய வந்த திரைக்கதை கடைசியில் உண்மையான குற்றவாளியைத் தண்டிப்பதோடு முடிகிறது. சுபம்!

கழைக்கூத்தாடி விதுபாலாவுடன் சவால் விட்டுத் தோல்வியுற்ற கட்டத்தில் ஏ. வி. எம். ராஜன் நடிப்பு சற்று பிரகாசிக்கிறது. அப்புறம் ஒரே மந்தகதிதான்! விதுபாலா எல்லாக் கட்டங்களிலும் நன்றும் நடித்திருக்கிறார்.

ஏழை அர்ச்சகப் பிராமணர்களை நையாண்டிசெய்து அறுத்துப் போகிற வகையில் காட்டுவது என்ன நாணயமோ, தெரியவில்லை!

முருகா, படம் பார்ப்பவர்களை இந்தக் கொடுமைகளிலிருந்து காப்பாற்று! திரைக்கதை ஆசிரியர்களுக்கும் படாதிபதிகளுக்கும் நீ வழிகாட்டினால்தான் உண்டு!

—காந்தன்

யார் யாருக்கோ
முருகன் வழிகாட்டுகிறான்;
ஆனால் படாதிபதிகளை மட்டும்
மறந்து விடுகிறானே!



# பொன்னியின்

## 7. அகக் கடலோசை

**எண்ண முடியாத அலைகளை;**
**எட்ட முடியாத ஆழத்தை.**

**கல்கியின் அலையோசை நாவலின் இறுதிக் கட்டத்தில் ஒரு காட்சி — பஞ்ச நதிகளில் ஒன்றான சேனாபில், சீதா படகிலிருந்து தண்ணீரில் விழுகிறாள்:**



முடிவில்லாத நேரம் சீதா தண்ணீருக்குள் கீழே கீழே கீழே போய்க் கொண்டிருந்தாள். பிறகு தன்னுடைய பிரயாசையின்றியே மேலே வருவதை உணர்ந்தாள். முகம் தண்ணீருக்கு மேலே வந்தது...

அலை ஒன்று சீதாவை நோக்கி வந்தது. அது ஓர் அடி உயர அலைதான். ஆனால்... அது மலையளவு உயரமாகச் சீதாவுக்குத் தோன்றியது. பொங்கும் கடலைப் போல் ஓசை செய்து கொண்டு அந்த அலை விரைந்து வந்து சீதாவை மோதியது....

தலைக்கு மேலே வெள்ளம் ஓடிக்கொண்டே, ஓடிக் கொண்டே, ஓடிக் கொண்டேயிருந்தது. நெற்றியின் மேலே அலை மோதிக் கொண்டே, மோதிக் கொண்டே, மோதிக் கொண்டேயிருந்தது. காதில் 'ஹோ' என்று இரைந்த அலையோசை, பல்லாயிரம் மக்களின் சோகம் நிறைந்த ஓலத்தையொத்த அலை ஓசை, மற்ற எல்லா ஓசைகளையும் அமுக்கிக் கொண்டு மேலெழுந்த பேரலையின் பேரோசை கேட்டுக் கொண்டே, கேட்டுக் கொண்டே, கேட்டுக் கொண்டேயிருந்தது. தலைக்கு மேலே ஓடிய வெள்ளத்தின் பாரமும் நெற்றியில் மோதிய அலையின் வேகமும், காதில் தாக்கிய அலையோசை இரைச்சலும், முடிவில்லாமல், இடைவெளியில்லாமல் நீடித்துக் கொண்டேயிருந்தன.

(பாகம் 4, அத்தியாயங்கள் 33, 34)



■ டெல்லிக்குக் 'கல்கி' வந்திருந்த சமயம் அவரைக் குதுப்மினாருக்கு அழைத்துச் சென்று காட்டும் வாய்ப்பு 'சுந்தா'வுக்குக் (இடது கோடி) கிடைத்தது. அச்சமயம் இந்தப் புகைப்படத்தை எடுத்தவர்: எல்லிஸ் ஆர். டங்கன், வலது கோடியில் ஓவியர் சந்திரா.

■ கீழே உள்ள படத்தில் குதுப்மினாருக்கும் பக்கத்தில் உள்ள பிரசித்தி பெற்ற இரும்புத் தூணுக்கருகே 'கல்கி' ஒரு கல் தூணை ஆராய்கிறார்!

கல்கியின் வர்ணனைத் திறமையைப் பற்றி, ''தமிழ்நாவலின் தோற்றமும் வளர்ச்சியும்'' என்ற தமது நூலில், கி. வா. ஜகந்நாதன் எழுதுகையில், மேலே உள்ளதில் கடைசிப் பாராவை ஓர் உதாரணமாய்க் காட்டியுள்ளார். ''இந்த வருணனையைப் பார்க்கும் போது கல்கியே தண்ணீரில் மூழ்கிவிட்ட அநுபவத்தை அடைந்திருப்பார் என்று எனக்குத் தோன்றுகிறது'' என்கிறார்.

கி. வா. ஜ.வின் ஊகம் சரியானதே. உண்மையிலேயே கல்கி, சிறு பிள்ளையாய் இருக்கையில் தண்ணீரில் மூழ்கிச் செத்துப் பிழைத்தார். ''ஒரு விபத்து''

# புதல்வர்

சுந்தா



முடிவில்லாத நேரம் சீதா தண்ணீருக்குள் கீழே கீழே கீழே போய்க் கொண்டிருந்தாள்...... ஓவியர்: சந்திரா.



பூக்குழலியிடம் கோபம் கொண்ட வந்தியத்தேவன் கடலில் குதித்து, அலைகளுடன் போராடிக் களைத்து மூழ்கப் போகும் தருணத்தில்...ஓவியர்: மணியம்.

என்பதாக முன்பு நாலாம் அத்தியாயத்தில் குறிப்பிட்ட இதை, இங்கே விரிவாகப் பார்ப்போம்.

புத்தமங்கலத்துக்குப் பக்கத்துக் கிராமமான மணல்மேட்டில், சவுக்கண்டி ஒன்று ஒரு குளத்தின் கரையில் இருந்தது. சவுக்கண்டி என்றால் சாவடி; அல்லது, உயர்த்திச் சொல்வதாய் ருந்தால், பங்களா. அந் ச் சவுக்கண்டியில், சாமி ாத அய்யர் என்பவர் நடத்திய பள்ளிக்கூடத்தில், கிருஷ்ணமூர்த்தியும் அண்ணன் வேங்கடராமனும் ஆரம்பக் கல்வி கற்றார்கள்.



''அம்மாவுக்கும் படிக்கத் தெரியாது. நாங்கள் யாரேனும்தான் அவளுக்கு அண்ணாவின் கதைகட்டுரைகளைப் படித்துக் காட்டுவோம்...''

மணல்மேட்டு கிராம முன்சீபின் அந்தச் சவுக்கண்டியை, கல்கி அப்படியே மனத்தில் வைத்திருந்து, ''அலை ஓசை'' நாவலில், பட்டாமணியம் கிட்டாவய்யர் அதைக் கட்டியதாக வர்ணித்தார்:

கிட்டாவய்யர், 'கொஞ்சம் சுகவாசியாயிருக்க வேண்டும், நாகரிகமாக வாழ்க்கை நடத்த வேண்டும்' என்று எண்ணி; ஊர்க் குளத்தங்கரையில் அவருக்கு இருந்த மேட்டு நிலத்தில் ஒரு சவுக் கண்டி கட்டினார். கூரைக்குக் கீற்றும் விழலும் போட்டார். நாலு புறமும் பிளாச்சு வேலி எடுத்தார். முன் பக்கத்தில் குரோட்டன்ஸ்‘களும், பின் பக்கத்தில் மல்லிகை முல்லை முதலிய புஷ்பச் செடிகளும் வைத்து வளர்த்தார். குளத்தங் கரைபங்களா என்றும் கிராம முனிசிபு சவுக் கண்டி என்றும் பெயர் பெற்ற அந்த இடத்தைத் தமது சொந்த ஆபீசாகவும் நண்பர்களுடன் சல்லாபம் செய்யும் இடமாயும் வைத்துக் கொண்டிருந்தார். முக்கியமாகக் கோடை காலத்தில் அந்தக் குளத்தங்கரை பங்களா ஜிலுஜிலுவென்று காற்று அடித்துக் கொண்டு வெகு சுகமாக இருக்கும்.

(பாகம் 1, அத்தியாயம் 22)

குளத்தின் மறு கரையில் அடர்த்தியான சவுக்குத் தோப்பு ஒன்று இருந்தது. அதன் வழியே காற்று வீசுகையில் உண்டாகும் ஒலி கடலோசையைப் போல் இருக்கும்.

அந்தச் சவுக்கண்டிப் பள்ளிக்கூடத்தில் அப்போது படித்துக் கொண்டிருந்த கர்ணம் வீட்டுப் பிள்ளைகளில், தம்பிக்கு வயது ஆறு, அண்ணனுக்கு ஒன்பது.

ஒருநாள் பிற்பகல் கணக்கு வாய்ப்பாடு முடிந்ததும், வாத்தியார் சாமிநாதய்யர் பிள்ளைகளுக்குக் கொஞ்சம் ஓய்வு விட்டார். வாய்ப்பாடு இரைச்சல் ஓய்ந்ததும், வெளியே சவுக்குத் தோப்பின் ஓசை ஓங்கிக் கேட்டது.

''குளத்திலே முகத்தை அலம்பிண்டு வரலாம், வா அண்ணு'' என்று தம்பி கூப்பிட்டான்.

அண்ணன் குளத்தில் இறங்கி அலம்பிக் கொண்டு கரை ஏறிவிட்டான். ஆனால் தம்பியோ சவுக்கு மரங்கள் தலையைத் தாழ்த்தியும் சுழற்றியும் ஆடிக் கொண்டிருந்ததைப் பார்த்தபடியும், ''ஹோய்'' என்றும் ''சோ'' என்றும் மாறி மாறி உண்டான சத்தத்தைக் கேட்டபடியும் குளத்தில் இறங்கியதால் திடீரென்று ஒரு மடுவுக்குள் விழுந்தான்.

''ஐயோ தம்பி!'' என்று அண்ணன் கூவினான்.

அவனுடைய கூச்சலை அடுத்து மற்றப் பையன்களும் கூச்சலிட்டார்கள். அருகே நடமாடிக் கொண்டிருந்த பெரியவர்கள் சிலர் ஓடி வந்தார்கள். அதற்குள் அண்ணன் குளத்தில் குதித்து விட்டான். மேலே எழுந்த தம்பியின் தலையைப் பிடிக்கத் தாவுகையில் அவனும் அந்த மடுவுக்குள் மூழ்கினான்.

அவர்களைக் காப்பாற்றப் பலர் இறங்கினார்கள். எல்லோருக்கும் முன்னால் வாத்தியாரும் கிராமமுனிசிபும் தாவி, ஆளுக்கு ஒரு பையனைத் தூக்கிக் கரையேற்றினார்கள். இரண்டு பையன்களுக்கும் வயிறு உப்பிப் போயிருந்தது. அநேகமாய் உயிர் போன நிலையில் இருந்தார்கள். அனுபவசாலிகளான இருவர் பையன்களைத் தலைமேல் வைத்து வட்டம் சுற்றித் தண்ணீரை வெளியாக்கினார்கள்; படுக்க வைத்து விலாவை அமுக்கி அமுக்கி மூச்சு வரும்படி செய்தார்கள்.

அதற்குள் அந்த விபத்து பற்றிய தகவல் எட்டி, பிள்ளைகளின் தாயாரும் தகப்பனாரும் மற்றவர்களும் அடித்துப் புரண்டு வந்தார்கள். பிள்ளைகள் ஆபத்து நீங்கி மூச்சு விடத் தொடங்கியதைக் கண்டு மகிழ்ந்தார்கள். அவர்களைக் காப்பாற்றியவர்களுக்குப் பொன்னுவையர் நெஞ்சம் குழைய நன்றி கூறினார். கிருஷ்ணமூர்த்தியைத் தாயார் ஏந்தித் தூக்கிக் கொண்டு, ''வைத்தியநாதர் கொடுத்த உயிர்ப் பிச்சை!'' என்று கண்ணீர் உகுத்தாள்.

அப்படி அந்த விபத்தில் செத்துப் பிழைத்த அனுபவம் கிருஷ்ணமூர்த்தியின் வாழ்நாள் நெடுகிலும் நினைவிலே திரும்பத் திரும்பத் தோன்றிக் கொண்டே யிருந்தது. இதன் பதிவையும் அத்தாட்சியையும், அவருடைய கற்பனையிலிருந்து எழுந்த எழுத்துக்களில் காணலாம்.

மறுபடியும் ''அலையோசை'' நாவலுக்கே போகலாம்.

பம்பாயிலிருந்து ராஜம்பேட்டைக்கு வந்திருந்த ராஜம்மாள், சூரியாவைக் கூட்டிக் கொண்டு, தான் சிறு பெண்ணாய் இருந்தபோது நீந்தி விளையாடிய குளத்தையும், அதன் கரையில் அன்று கட்டியிருந்த சவுக்கண்டியையும் பார்க்கச் செல்கிறாள். பழைய நினைவுகள் வந்து மோதவே, அவைகளைப் பற்றிச் சூரியாவிடம் பேசுகிறாள். பேசிக் கொண்டிருக்கையில் —

ராஜம்மாளின் முகத்தில் பீதியின் அறிகுறி தோன்றியது. ''சூரியா! இது என்ன ஓசை?'' என்று கேட்டாள்.

''ஓசையா? என்ன ஓசை? எனக்கு ஓசை ஒன்றும் கேட்கவில்லையே!'' என்றான் சூரியா.

''கவனித்துக் கேள் சூரியா! சமுத்திரத்தின் அலையோசை மாதிரி சத்தம் கேட்கவில்லையா?''

சூரியாவின் காதிலும் அப்போது அந்த ஓசை கேட்டது. பங்களாவுக்கு வெளியே எட்டிப் பார்த்தான். சற்றுத் தூரத்தில் ஒரு விஸ்தாரமான சவுக்கு மரத் தோப்பு காணப்பட்டது. இளவேனிற் காலத்தின் இனிய தென்றல் அந்தத் தோப்பில் பிரவேசித்து, நெருங்கிய சவுக்கு மரக் கிளைகளின் வழியாக நுழைந்து சென்ற போது உண்டான சத்தந்தான் அப்படிச் சமுத்திரத்தின் அலையோசை போன்ற பிரமையை உண்டாக்கியது.

இதைத் தெரிந்து கொண்ட சூரியா, ''அத்தை, அலையும் இல்லை, ஓசையும் இல்லை. அதோ அந்தச் சவுக்குத் தோப்பின் கிளைகள் காற்றில் அசைவதுதான் அலையோசை போன்ற சத்தத்தை உண்டாக்குகிறது!'' என்றான்.

அது உண்மை என்று தெரிந்து கொண்ட பிற்பாடு ராஜம்மாளின் முகம் சிறிது தெளிவடைந்தது.

(பாகம் 1 அத்தியாயம் 24)

இந்த உரையாடல் நிகழும் நாவலை எழுதிய சமயத்தில் கல்கிக்கு நாற்பத்தொன்பது வயது. அவர் சிறுவராயிருந்தபோது படித்த குளத்தங்கரைச் சவுக்கண்டியும் அதன் சூழலும் மாறிப் போயின. அந்த மாற்றத்தையும் அதே நாவலில் காண்கிறோம்:

சீதாவும் லலிதாவும் அன்று சாயங்காலம் குளத்தங்கரைப் பங்களாவுக்குச் சென்றார்கள்.

இது ஒரு அதிசயம்தான், கண்கவர் தோற்றமுள்ள மங்கை பொதுவாக...

...அழகான ஆடைகளைத்தான் அணிகிறாள்!



நிச்சயமாக, மபத்லால் க்ரூப் அளிப்பவை நேர்த்தியான துணிமணிகள்தான்!

AIYARS.M.456 TM

'பங்களா'வென்று அந்தக் கட்டடத்தை முன்னே மரியாதைக்குச் சொல்லக்கூடியதாக இருந்தது. இப்போது அப்படிக்கூடச் சொல் வதற்கில்லை. அந்தக் கட்டடத்தின் கூரையில் பல துவாரங்கள் காணப்பட்டன. மேற்தரை குண்டும் குழியுமா யிருந்தது. சுவர்களின் மேல்பூச்சு பல இடங்களில் உதிர்ந்து போயிருந் தது. திண்ணைக்குப் பந்தோபஸ்தாகவும் அலங்காரமாகவும் அமைந்திருந்த மூங்கில் பிளாச்சு வேலி, பல இடங்களில் முறிந்து விழுந்து கிடந்தது.

பங்களாதான் இப்படி என்றால், பங்களா வுக்கு எதிரில் இருந்த குளமும் களை குன்றிக் காணப்பட்டது.

குளத்தில் தண்ணீருக்குக் குறைவில்லை. ஆனால் முன்னொரு காலத்தில் கரையோரமாக வளர்ந்திருந்த அலரிச் செடிகளையும் செம் பருத்திச் செடிகளையும் இப்போது காண வில்லை. குளத்தின் படித்துறை பாசி பிடித் தும் இடிந்தும் காணப்பட்டது.

சீதாவும் லலிதாவும் குளக்கரையில் இடிந்த படிக்கட்டில் உட்கார்ந்து கொண்டார்கள். சிறிது நேரம் சீதா சுற்று முற்றும் பார்த்துக் கொண்டேயிருந்தாள். சுற்றுப்புறத் தோற் றத்தில் இன்னும் ஏதோ ஒரு வித்தியாசம் இருப்பதாக அவளுக்குத் தோன்றிக் கொண்டே யிருந்தது. பளிச்சென்று அது என்ன என்பது புலனாயிற்று.

''லலிதா! குளத்தின் மேலக்கரையில் இருந்த சவுக்கு மரத்தோப்பு எங்கே?'' என்று கேட்டாள்.

''அதை வெட்டி விறகுக்கு விற்றுவிட் டது'' என்றாள் லலிதா.

''அதனால்தான் இந்தப் பக்கமெல்லாம் இப்படிப் பார்ப்பதற்கு வெறிச்சென்று இருக் கிறது. சவுக்குத் தோப்பை வெட்டி விட்ட படியால், இந்தக் குளக்கரையின் அழகே போய் விட்டது. இப்போது என்னுடைய வாழ்க்கை சூனியமாயிருப்பதுபோல் இந்தப் பிரதேசமும் சூனியமாயிருக்கிறது!'' என்று சொல்லிச் சீதா பெருமூச்சு விட்டாள்.

(பாகம் 4, அத்தியாயம் 4)

அந்தச் சவுக்கண்டியையும் குளக் கரையையும் மேலும் சிதைந்த, உரு மாறிய நிலையில் இந்த நூலாசிரியன் கண்டான் — 1972 செப்டம்பர் மாதத் தில். கல்கி பிறந்த ஊரைப் பார்த்து, அவரைப் பற்றிய தகவல்களை அவ ருடைய அண்ணா வேங்கடராம அய்ய ரிடமிருந்தும் தம்பி ஜகதீச அய்யரிட மிருந்தும் தெரிந்து கொள்வதற்காக, கல்கியின் குமாரர் ராஜேந்திரனுடன் சென்றிருந்த சமயம் அது.

கல்கி பிறந்த பூர்வீக வீட்டைச் சுற்றிக் காட்டிய ஜகதீசய்யர், பாகப் பிரிவினையின்போது தம் பாகமாக அது கிடைத்தது தமது பாக்கியம் என்று கூறினார். அதற்கு வலப் பக் கத்து மனையில் வேங்கடராம அய்யர் புதிதாக வீடு கட்டிக் கொண்டார்.



''உங்களிடம் வாடகை பாக்கியை வசூல் செய்வதற்காக நான் வரவில்லை. இப்ப சொல்லுங்கள்; உங்களுக்கு எத்தனை நிமிஷமாக ஜுரம்?''

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

பிதிரார்ஜிதமான பத்தரை ஏக்கரா நன்செய் நிலத்தில், மூவருக்கும் சற்றே ஏறத்தாழ சம பாகம்; கல்கிக்குக் கிடைத்தது மூன்றேகால் ஏக்கரா சொச் சம். பின்னர் அவர் சுய சம்பாத்தியத் தில் நாலரை ஏக்கர் வாங்கிக் கொண் டார். குடும்பத்தின் கடன் சுமையில் அவர் கணிசமான பங்கை ஏற்று, சென்னையிலிருந்து மாதா மாதம் பணம் அனுப்பி அடைத்தார்.

பெருமாள் கோயிலுக்குப் பக்கத்தில் ஒரு சிறிய தென்னந் தோப்பும் கல்கிக் குக் கிடைத்தது — பாரதி கனவு கண்ட காணி நிலம்! பட்டணத்தின் சந்தடியி லிருந்தும் தமது வாழ்க்கையின் ஓட்ட சாட்டங்களிலிருந்தும் விடுபட்டு, அந் தத் தோப்பில் வீடு கட்டிக் கொண்டு நிம்மதியாய் வசிக்கப் போவதாக அவர் சொல்லிக் கொண்டிருந்தாராம். அந்தப் ''பாரதிக் கனவு'' பலிக்கவில்லை!

''பாகம் பிரித்துக் கொண்டபோதோ, முன்போ பின்போ, எங்கள் மூன்று பேருக்கும் இடையே எவ்விதமான தாவாவோ மனத்தாங்கலோ இருந்த தில்லை'' என்று வேங்கடராம அய்யர் சொன்னார்.

''கிருஷ்ணமூர்த்தி அண்ணா எங்க ளுக்கு நிறையச் சலுகை காட்டினார்'' என்று தம்பி சொன்னார். ''நிலங்களின் விளைச்சலில் குறைந்தபட்ச அளவைக் கொடுத்தால் போதும் என்று சொல்லி, அப்படியே கடைசி வரை ஏற்றுக்கொண் டார். எங்கள் குடும்பங்களுக்கும் சரி, மற்றப் பந்துக்களுக்கும் சரி, கல்யாணம் முதலிய விசேஷங்களுக்குத் தாராளமாய்ப் பண உதவி செய்திருக் கிறார்.''

தமது மனைவியை ஜகதீச அய்யர் அறிமுகப்படுத்தி விட்டு, தமது கல்யா ணம் சம்பந்தமான தகவல் ஒன்றைத் தெரிவித்தார். ''இவள் தாயில்லாப்

பெண் என்ற காரணத்தால், இவனை எனக்குப் பண்ணி வைக்க என்னைச் சேர்ந்தவர்கள் விரும்பாமல் இருந்தார்கள். இதைக் கேள்விப்பட்ட கிருஷ்ணமூர்த்தி அண்ணா, அந்தக் காரணத்தினாலேயே இவளைப் பண்ணிக் கொண்டு ஆதரிக்க வேண்டும் என்று கட்டாயப் படுத்தினார்.''

''உங்கள் தாயார் கல்கியின் கதைகளைப் படித்துப் பாராட்டுவதுண்டா?'' என்று கேட்ட போது, ''அம்மாவுக்குப் படிக்கத் தெரியாது'' என்றார் ஜகதீச அய்யர். ''நாங்கள் யாரேனுந்தான் அவளுக்குப் படித்துக் காட்டுவோம். அண்ணாவின் திறமையைப் பற்றியும் புகழைப் பற்றியும் அவளுக்குப் பெருமைதான். ஆனால் எங்களைப் போல் வெளியே சொல்லிப் பெருமை அடித்துக் கொள்ள மாட்டாள்.''

தாயாரிடம் கல்கிக்கு இருந்த மதிப்புக்கு எடுத்துக்காட்டாக ஒரு விவரத்தைச் சகோதரர்கள் தெரிவித்தார்கள். ரிஷிபஞ்சமி விரதம் எடுத்து முடிக்க வேண்டும் என்று தாயார் விரும்பினாராம். அது அனாவசியம் என்று கல்கிக்குத் தோன்றிய போதிலும், அம்மாவைத் திருப்தி செய்வதற்காக, அவரே கிராமத்துக்கு வந்திருந்து, நிறையப் பணம் செலவு செய்து அதைப் பெரிதாக நடத்தி வைத்தாராம்.

மணல்மேடு குளத்தங்கரையும் சவுக்கண்டியும் ஏமாற்றம் தருவதாய் இருந்த போதிலும், இரண்டு கிராமங்களின் மற்றப் பகுதிகளில் பல, பிள்ளைப் பருவத்தில் கல்கி கண்டது போலவே தமது கதை கட்டுரைகளில் அவர் வர்ணித்துள்ளது போலவே இருந்தன.

புத்தமங்கலத்தில், கல்கியின் சகோதரர்களைத் தவிர, அவருடைய பால்ய நண்பர் முத்துக்கிருஷ்ணனின் தம்பி சாரங்கபாணி நாயுடுவும் தகவல்கள் தெரிவித்தார் — குறிப்பாக, கல்கியும் தோழர்களும் நாடகங்கள் போட்டது பற்றி.

தகவல் தெரிவித்த இன்னொருவர், கல்கியின் நிலங்களைச் சாகுபடி செய்த ராசாங்கப் படையாச்சி. ''நடு ஐயா'' என்று அவர் கல்கியைக் குறிப்பிட்டார், மூன்று சகோதரர்களில் அவர் நடு என்ற காரணத்தால். சொற்ப வசதியேயுள்ள குடும்பத்தில் பிறந்த நடுவையா, ''முதல்லே காங்கிரசுலே சேர்ந்துக்கிட்டுச் செயிலுக்குப் போனாலும், பிற்பாடு பட்டணத்திலே பேப்பர் போட்டு நிறையச் சம்பாதிச்சாரு'' என்பதிலே படையாச்சிக்கு மிக்க மகிழ்ச்சி. அவர் கார் போட்டு அடிச்சதிலேயும் கணக்கையர் மகன் கலெக்டர் மாதிரி கிராமத்துக்கு மோட்டாரிலே வந்து போனதிலேயும் ராசாங்கப் படையாச்சிக்குப் பெருமை.

அன்றிரவு நடுவையா வீட்டுத் திண்ணையில், தனிமையில் உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்த போது, திடீரெனக் காற்று வீசத் தொடங்கிற்று. சுற்றிலுமுள்ள எண்ணிலா மரங்களில் எழுந்த சலசல இலையோசை, கல்கியின் நினைவில் நெடுகிலும் சுழன்று கொண்டிருந்த அலைஓசையை நினைவூட்டியது. அத்துடன், தண்ணீரில் மூழ்கும் அனுபவத்தை, ''அலைஓசை'' நாவலைத் தவிர, பொன்னியின் செல்வனிலும் அவர் சில இடங்களில் விரிவாகப் பயன்படுத்தி இருக்கிறார் என்பதை எண்ணத் தூண்டியது.

''பொன்னியின் செல்வன்'' என்ற பெயருக்கு உடையவன் சிறுவனாயிருக்கையில் காவேரியில் மூழ்க, அவனைக் காவேரி அம்மன் காப்பாற்றுகிறாள். அடுத்து வந்தியத்தேவன் கடலில் விழுந்த சம்பவம்.

இளையபிராட்டி குந்தவை கொடுத்த ஓலையைப் பொன்னியின் செல்வரிடம் சேர்ப்பிப்பதற்காக, வந்தியத்தேவன் இலங்கை நோக்கிச் செல்கிறான். அவனைச் ''சமுத்திரகுமாரி'' பூங்குழலி தன் படகில் இருட்டு வேளையில் ஏற்றிப் போகிறாள். தன் இடுப்பில் வைத்திருந்த ஓலையைப் பூங்குழலி கள்ளத்தனமாய்ப் படித்துப் பார்த்து விட்டாள் என்பதை அறிந்ததும், ''மோசக்காரி'' என்று அவளை வந்தியத்தேவன் வைது, படகைக் கரைக்குத் திருப்பச் சொல்கிறான். அவள் மறுக்கவே, வெறி கொண்ட வந்தியத்தேவன் கடலில் குதித்து விடுகிறான். அவனுக்கு ஓரளவு நீந்தத் தெரியும். ஆனாலும் கடலலைகளுடன் போராடிச் சளைத்து மூழ்கப் போகிறான். அவனை மயங்கிய நிலையில் பூங்குழலி காப்பாற்றுகிறாள். அவன் கண் விழித்த போது —

ஜிலுஜிலுவென்று குளிர்ந்த காற்று அவன் உடல் மீது பட்டு அவனுக்கு எல்லையற்ற சுகத்தையும் அமைதியையும் அளித்தது. அமைதியான கடலில் எழுந்த ஓங்கார நாதம் அவன் உள்ளத்தில் அபூர்வமான சாந்தியை உண்டாக்கியது. அந்த நாதத்தினிடையே ஒரு கீதம் கேட்டது...

**''அலைகடலும் ஓய்ந்திருக்க**
**அகக் கடல்தான் பொங்குவதேன்?''**

**(பாகம் 2, அத்தியாயங்கள் 7, 8)**

அடுத்தாற்போல், வானதியின் ''ஜல கண்டம்''.

BANK OF INDIA

WITH SAFE DEPOSIT V

"நாங்கள்
இருவரும் ஒரே
நேரத்தில்தான் பிழைப்புக்
கான வழியைத் தேடினோம்
என்பதை எண்ணிப்
பார்க்கிறபோதுதான்..."

அருண் விவேகத்தோடு பாங்க் ஆ:ப் இந்தியா அளித்த ஆலோசனையையும் நிதியுதவியையும் தேடிக் கொண்டான். அவை வாழ்வில் அவனைக் கை தூக்கிவிட்டன. இன்று அருண் தானே சொந்தமாக ஒரு சிறு தொழில் நடத்திச் செழிப்புற்று விளங்கும் பெரும் புள்ளி. அந்தோ! பிரதாப் வாழ்வில் எவ்வளவுபின்தங்கி விட்டான்!

பாங்க் ஆ:ப் இந்தியா சிறுதொழில்களுக்குத் தாராளமான நிபந்தனைகளில் கீழ்க்கண்டவற்றிற்கான நிதியுதவி அளிக்கிறது:

- நிலம், கட்டடம், தொழில் மனை, இயந்திரங்கள் போன்றவை அமைக்கத் தேவையான நிலையான மூலதனம்.
- மூலப் பொருட்கள், நுகர்ச்சிப் பொருட்கள், உபரிகள், தயாரிப்பு நிலை உற்பத்திகள், உற்பத்தி முழுமை பெற்ற தயாரிப்புகள், எதிர்பார்க்கும் வரவுகள் இவற்றிற்கு எதிரான நடைமுறை மூலதனம்.
- ஏற்றுமதிக்கு உதவும் நிதிகள்



பாங்க் ஆ:ப் இந்தியாவின் நட்புறவு
பங்குடை வாழ்வினிலோர் நல்லுறவு

**பாங்க் ஆ:ப் இந்தியா**

RAAS/CB/007 TN



மகாராஷ்டிர மாநிலத்தில்

வீட்டுக்கோ அல்லது கடைக்கோ வரும் பிச்சைக் காரர்களை இங்கு விரட்டி அடிக்கும் பழக்கம் இல்லை. ''மாஃகரா'' என்று மராத்தியில் சொல்லி அனுப்பி விடுகிறார்கள். ''மாஃகரா'' என்றால் மன்னித்து விடு என்று அர்த்தம். -கலா சம்பத்

---

பொன்னியின் செல்வரிடம் நெஞ்சைப் பறி கொடுத்திருந்த வானதி, அவர் கடலில் மூழ்கி விட்டார் என்ற செய்தி கேட்டு, அரண்மனைத் தோட்டத்து ஓடையை நோக்கி ஓடுகிறாள். அந்த ஓடை அரசலாற்றில் கலக்கிறது. அரசலாறு கடலில் போய்ச் சங்கமமாகிறது. அந்த ஓடையில் விழுந்து விட்டால், கடலடியில் காத்திருக்கும் இளவரசரை அடைந்து விடலாம். அவளுக்காக அவர், முத்துக்களாலும் பவளங்களாலும் ஆன அற்புத மாளிகையில் காத்துக் கொண்டிருக்கிறார். அவரைச் சந்திக்கப் போகாமல் இந்த உலகில் வேறு என்ன வேலை?

ஓடைக் கரையை அணுகியதும் அவளுக்கு வழக்கமான மயக்கம் வருகிறது. மயக்கத்துடனேயே தண்ணீரில் விழுந்து மூழ்குகிறாள் வானதி. அவள் காப்பாற்றப்பட்டுக் கரை சேருமுன் என்னவெல்லாம் கனவுகள் காண்கிறாள்!

வானதி மூழ்கியது கனவுக் கடலிலே!

அவளுடைய அனுபவத்தையும் சரி, பொன்னியின் செல்வன், வந்தியத் தேவன், சீதா, ராஜம்மாள் ஆகியோரின் அனுபவங்களையும் சரி, தமது சொந்த அனுபவத்தையே, கற்பனைச் சித்து விளையாட்டினால் கூடுவிட்டுக் கூடு மாற்றிக் கல்கி படைத்தார்.

அந்தத் தண்ணீர் விபத்தின் நினைவினால் முதலில் அச்ச அலைகள் எழுந்தன. பின்னர் அவை, ஆனந்த அலைகளாய், கனவு அலைகளாய், கற்பனை அலைகளாய் மாறின. அவையெல்லாம் சேர்ந்து இலக்கிய இன்ப அலைகளாய் மாறிப் புரண்டன.

''களிப்பும் வியப்பும் ஊட்டிய கல்கி'' என்ற தலைப்புடன், 8.9.'63 ஆனந்த விகடனில், இந்த நூலாசிரியன் ஒரு கட்டுரை எழுதினான். அதன் முதற் பகுதி, இந்த அத்தியாயத்துடன் பொருந்துகிறது:

'அலையோசை' தொடர்கதையை எழுத ஆரம்பித்த சில வாரங்களுக்கெல்லாம், அதற்கு வேண்டிய டெல்லிச் சூழ்நிலையைக் கிரகித்துக் கொள்வதற்காக, கல்கி அங்கே வந்திருந்த சமயம், அவருக்கு டெல்லிக் காட்சிகளைச் சுற்றிக் காட்டும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கட்டாயமாய் இங்கே பார்க்க வேண்டியவற்றில் ஒன்றான குதுப்மினாருக்கு அவரை அழைத்துச் சென்ற போது, அதன் உயரத்தை அவர் கண்ணால் மட்டுமே அளந்து பார்த்தார். காலால் அளந்து பார்க்கத் தெம்பு இல்லை. உடன் வந்திருந்த தம் குமாரரைத் தமக்குப் பதிலாக மேலே ஏறிப் பார்க்கும்படி சொல்லிவிட்டு, ஒரு மரத்தின் நிழலில் அமர்ந்து கொண்டார். அவருக்குத் துணையாக நானும் உட்கார்ந்து, ஏதேனும் பேச்சுத் துவங்க வேண்டுமே என்பதற்காக, ''உடம்பு அவ்வளவாய்த் தெம்பாய் இல்லாதபோது இப்படி அலையலாமா?'' என்று கேட்டேன். அதற்கு அவர் சொன்ன பதில் விந்தையாய் இருந்தது.

''எனக்கு ஓரிடத்திலும் இருப்புக் கொள்ளவில்லை. இடத்துக்கு இடம் எதையோ, யாரையோ தேடி அலைந்து கொண்டேயிருக்கிறேன். இடத்துக்கு இடம் அலையாதபோது இருந்த இடத்திலேயே மனம் அலைகிறது. ஓர் அலைச்சல் இன்னோர் அலைச்சலை ஓய வைப்பதற்குப் பதிலாக, மேலும் மேலும் ஊக்கி விடுகிறது. அதனாலே அலைச்சலுக்கு மேல் அலைச்சல்; ஓயாத அலைச்சல்.''

இப்படி அவர் பேசியதைக் கேட்பது, அவர் உள்ளத்திலிருந்து ஓர் அலையோசையைக் கேட்பது போல் இருந்தது. ''இந்த அலைச்சல்களை எண்ணித்தான் இப்போது நீங்கள் எழுதிக் கொண்டிருக்கும் நாவலுக்கு 'அலை ஓசை' என்பதாகப் பெயர் கொடுத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது'' என்று நான் சொல்ல, அதற்கு அவர், ''என்னுடைய அலைச்சல்களுக்கும் இந்த நாவலின் பெயருக்கும் சம்பந்தம் ஏதுமில்லை'' என்று மறுத்தார். நான் சொன்னேன்: ''சம்பந்தம் இருக்கிறதோ இல்லையோ, நீங்கள் சொன்ன அந்த இரண்டு வித அலைச்சல்கள்தான் இந்த நாவலை எழுத வைத்திருக்கின்றன. இந்த நாவலும் உங்களை மேலும் மேலும் அலைய வைத்திருக்கிறது.'' இதைக் கேட்டு அவர் சிரித்துக் கொண்டே, ''நானும் ஆத்திரம் தீரக் கதாபாத்திரங்களை அலைய வைத்துக் கொண்டிருக்கிறேன்'' என்றார். ''உங்களுடைய உள் அலைச்சல்கள் வெளி அலைச்சல்கள் காரணமாய்த் தோன்றும் கற்பனை அலைகள்தான் உங்களுடைய இலக்கியம்'' என்றேன் நான்.

அவர் ஏதும் பேசாமல் சிந்தனையில் ஆழ்ந்தார். மறுபடியும் அந்த அலையோசை அவர் உள்ளத்திலிருந்து கேட்பது போல் இருந்தது. இப்போது இத்தனை நாட்கள் ஆன பின்பும், அவரைப் பற்றி நினைக்கும் போதெல்லாம், அவருடைய எழுத்துக்களைப் படிக்கும் போதெல்லாம், அவருடைய இலக்கிய வாழ்க்கையை ஆராய்ந்து மதிப்பிடும் போதெல்லாம் அதே அலையோசையைக் கேட்பது போல் இருக்கிறது.

(தொடரும்)

# புதுமை குன்றா பொலிவுடன் இருங்கள்




சிந்தால் டாய்லெட் பவுடர் சங்கட மான உடல் துர்நாற்றத்திலிருந்து உங்களைப் பாதுகாத்து, அதி-வெப்பமான தினத்திலும், நாள் முழுவதும் உங்களைப் புத்துணர்ச்-சியுடன் வைத்திருக்கிறது. அதன் அருமையான நறுமணம் உங்களை விட்டு அகலுவதில்லை.

**கோத்ரெஜ்** அளிக்கும்

# சிந்தால்

Interpub/GSP/12/74 Tam

கனகலிங்கம் கறார்ப் பேர்வழி : கண்டிப்புக்குப் பெயர் போனவர். கிட்ட நெருங்க முடியாத அளவுக்கு அனல் அடிக்கும். வருமான வரித் துறை அதிகாரியான அவரைக் கண்டாலே பலருக்கும் சிம்ம சொப்பனம். அவரிடம் மாட்டிக் கொண்டு மீண்டு வர முடியாதபடி திண்டாடினவர்கள் எத்தனை பேரோ? ஆட்சித் துறையே மார்பு தட்டிப் பெருமை கொள்ளும் அளவுக்கு அவர் பட்டப் பெயர் வாங்கியிருந்தார், 'கனல் கனகலிங்கம்' என்று.

''பலே! பலே!'' என்று அன்றைய தினத் தாளைப் படித்துக் கொண்டிருந்த கனகலிங்கம் கூவினார்:

# கனல் கனகலிங்கம்

ரா. வீழிநாதன்

செய்தியில் விளைந்த சிறுகதை—

**வருமான வரி இலாகாவுக்கு வந்த 'மனசாட்சி பணம்'**



''மனச்சாட்சியாம், அது உறுத்திற்றாம். உடனே ஐந்துக்கும் பத்துக்கும் போஸ்டல் ஆர்டர்களாக வாங்கி ஆறாயிரத்து முந்நூற்று ஐம்பத்தைந்து ரூபாய் வருமான வரித் துறைக்கு அனுப்பியிருக்கிறானாம் ஒரு பிரகிருதி. செய்வதையும் செய்துவிட்டு, இப்படி ஊர் பேர் சொல்லாமல் பணம் அனுப்பி வைத்தால் ஆயிற்றா? எந்த நிலத்தை என்ன விலைக்கு விற்றானோ, எந்த பிஸினஸிலே என்ன 'கோல்மால்' பண்ணினானோ? ஆறாயிரத்துச் சொச்சம் என்ன கணக்கு? கட்ட வேண்டிய வரித் தொகை அறுபதினாயிரத்துச் சொச்சமாகக்கூட இருக்கலாம்! அதையெல்லாம் கணக்குப் பார்த்துப் பைசாத் தப்பில்லாமல் சொல்ல வேண்டியது அதிகாரிகளின் கடமை. அதை விட்டுவிட்டு ஊரும் பேரும் சொல்லாமல் நல்ல பெயர் வாங்கிக் கட்டிக்கப் பார்க்கிறான்! ஆமாம், ஊரும் பேரும் தெரியாதவனுக்கு நல்ல பெயர் எங்கிருந்து வரும்? இந்தப் பத்திரிகைக்காரங்களும் அதைப் பெரிசாப் பெட்டி கட்டி மனச்சாட்சிக்குப் பெத்தப் பேர் தரப் பார்க்கிறாங்களே! இதெல்லாம் வெறும் களைக்கு உதவாத காரியம்!''

''என்னங்க! நீங்களா பேசிக்கிட்டிருக்கீங்க!'' அருகிலேயே அமர்ந்து அரிசியில் கல் பொறுக்கிக் கொண்டிருந்த அவர் மனைவி பத்மாசனி கேட்டாள்.

''நான் பேசல்லே. என் மனச்சாட்சி பேசுது! நானும் தெரியாமல்தான் கேட்கிறேன்!''

'' நீங்கள் தெரியாமல் கேட்பீங்களா? இந்தத் துறையிலேயே நீங்க பழம் எடுத்தவராச்சே!''

''அதுக்குச் சொல்லலே. ஒரு பேச்சுக்குச் சொல்றேன். இந்த மனச்சாட்சியின் வண்டவாளம் நாளைக்கு அம்பலமாகிப் போவுதுன்னு வச்சிக்க. அம்மான்னு விடுமா, ஐயான்னு விடுமா? அப்பனுக்கு ஒரு குரல் அழுதுக்கிட்டு அபராதத் தொகையும் சேர்த்தல்ல கட்ட வேண்டியிருக்கும். இந்த மனச்சாட்சித் தொகைக்கு என்னுதானே? ஆமாம், இப்ப வந்த மனச்சாட்சி அப்போ எங்கே போச்சுதாம்? நீதி — நேர்மை, சட்டதிட்டம் இதற்குக் கட்டுப்பட்டு நடக்கணும். இல்லாட்டிச் சமுதாய வாழ்வு சீர்ப்பட நடைபெறாது. இது பயன் இல்லாத மனச்சாட்சி!''

''இப்பவாவது மனம் திருந்திச்சேன்னு சந்தோஷப்படறது போக.....''

''கண் கெட்ட பின் சூரிய நமஸ்காரம் செய்யற கதைதான்!'' என்று முத்தாய்ப்பு வைத்தார் கனகலிங்கம்.

பத்மாசனிக்கு ஒரு சுற்று பருத்துவிட்டாற் போன்ற பெருமிதம். கரம் பற்றிய கணவர் ஊடலிலேயே பாதிநாட்களைக் கழிப்பவராயிருந்தாலும், நெறியில் நிற்பவராக அமைந்து விட்டதில் அவளுக்கு உள்ளூற மகிழ்ச்சி!

கனகலிங்கத்துக்குக் கோபம் வந்துவிட்டால் திடீரென்று பெட்டி படுக்கையுடன் கிளம்பி விடுவார். ஆபீசுக்கு இரண்டு நாட்கள் நாலு நாட்கள் என்று லீவு போட்டுவிட்டுப் போனவர் ஐந்தாம் நாள் திரும்பும்போது முகமலர்ச்சியுடன் மனைவியை அணுகிக் குழைந்து பேசுவார். ஊடலுக்குப் பிறகு நேரும் இந்தக் கூடல் பத்மாசனிக்குப் பரம சந்தோஷம் அளிக்கும். எனவே இப்போதும் கனகலிங்கம் ஏதோ ஒரு சின்ன விஷயத்துக்காகச் சண்டை

போட்டுக் கொண்டு புறப்பட்டதும் அவன் வியப்படையவில்லே. அவனுக்குப் பழக்கமாகி விட்டது. ஆனல் கனகலிங்கத்தின் ஒவ்வோர் ஊடலுக்குப் பின்னுலும் ஒரு கதை உண்டு; இன்றைய ஊடலுக்குப் பின்னுலும் அது இருந்தது !

2

அலுவல் முடிந்து நெட்டி முறித்துக் கனக லிங்கம் நிமிர்ந்தபொழுது, மேஜையின் மீது வைத்திருந்த ஒரு பெரிய கனத்த உறை அவர் கண்களில் பட்டது. 'இத்தனே நேரமும் இல்லாத இது எங்கிருந்து வந்தது ?' ஆவ லுடன் அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தார். கத்தை கத்தையாகப் போஸ்டல் ஆர்டர்கள் அதில் இருந்தன. வேலூர், பெங்களூர், சென்னே போன்ற பல இடங்களிலிருந்தும் வாங்கிய ஐந்து ரூபாய், பத்து ரூபாய் பெறு மானமுள்ள போஸ்டல் ஆர்டர்கள் அவை. வருமான வரித் துறையினர் சென்னேயில் பெற்றுக் கொள்ளும்படி எழுதியிருந்தது.

மொத்தத் தொகையை எண்ண ஒன்று ஒன்ருகப் பார்த்து வந்தபொழுது அவருக்கு ஓர் ஆச்சரியம் காத்திருந்தது !

''முட்டாள் ! பெறுபவரின் பெயரைப் பல ஆர்டர்களில் எழுதாமல் விட்டுவிட்டானே ! யார் இவ்வளவையும் எழுதிக் கொண்டு உட் கார்ந்திருப்பது?'' முணுமுணுப்பில் மூளே விழித்துக் கொண்டது. மனம் உறங்கத் தொடங்கியது.

''மடையன் ! மனச்சாட்சியாம், உறுத் திற்றும் ! என்ன கதையளக்கிருன்! இந்தப் பயல்களேயெல்லாம் பிடித்துச் சிறையில் அடைத்துச் செக்குச் சுழற்றவிட வேண்டும்!'' அனுப்பியவரின் பெயரைத் தேடினர், பலே புத்திசாலியாக! விழித்த மூளேக்கு வேலே கொடுத்து வெகு நேரமாகிய பின்னரே, போஸ்டல் ஆர்டரில் அனுப்புபவரின் ஊர் — பெயர் குறிப்பிடத் தேவையில்லே என்னும் உண்மை விளங்கியது.



சீட்டுப் பிரிப்பது போல் பெறுபவரின் பெயர் எழுதிய போஸ்டல் ஆர்டர்களேயும் பெயர் எழுதாதவைகளேயும் தனித் தனியா கப் பிரித்தார். கூட்டிக் கழித்துக் கணக்குப் போட்டார். எழுதியவை ஆறுயிரத்து முந் நூற்று ஐம்பத்தைந்து; எழுதாதவை நாலா யிரத்து நூற்று நாற்பத்தைந்து ! 'அடே யப்பா ! எழுதுகிறவனின் கைவிரல்கள் சொடக்கு விட்டுப்போகும்! அவ்வளவையும் கஜானுவில் சேர்ப்பித்தாக வேண்டும். எல் லாம் பெரிய வேலே, பொறுப்பான வேலே!''

3

இவ்விவரம் பற்றிய செய்தி பத்திரிகை களில் வெளியான பொழுது கருணுகரனே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. 'ஆறுயிரத்து முந்நூற்று ஐம்பத்தைந்துக்குத் தானே கணக்கு வெளியாகியிருக்கிறது! பாக்கி நாலா யிரத்து நூற்று நாற்பத்தைந்து என்ன ஆயிற்று ?' என்று !







'பயிரை வேலி மேய்ந்திருக்குமா? அல்லது வேறு ஏதாவது மேய்ந்திருக்குமா ? கடமை, கண்ணியம், கட்டுப்பாடு என்னும் கோட்பாடுகளைக் கடைப்பிடிக்கும் கருர் நபரை எப்படிச் சந்தேகிப்பது? அப்படியே சந்தேகம் ஊர்ஜிதம் ஆனாலும் அதற்கு வலுவான தடயங்கள் வேண்டுமே!' துப்புத் துலக்கியே ஆக வேண்டும் என்று மனச்சாட்சி வற்புறுத்தியது.

4

“மனோஹரி ஜான் ! உனக்கு இந்தப் பெயர் வைத்தவனுக்குப் பாராட்டுவிழா நடத்தலாம். அப்படி நீ உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறாய் !''

''அப்படியா ? பாராட்டு விழா நடத்துவதென்றால், பெயர் வைத்த உங்களுக்கேதான் நடத்த வேண்டும் ! ஆனால் எனக்கு ஒரு குறை. நீங்கள் வருகிறாற் போல் வந்து பிரிகிறாற் போல் பிரிந்து போய்விடும்பொழுது என் மனத்தைப் பிரிவுத் துயர் எப்படி வாட்டுகிறது, தெரியுமா ?''

''அது நீ சொல்லியா தெரிய வேண்டும் ? நானும்தான் அதே நிலையை அனுபவிக்கிறேனே ! நான் அவ்வப்போது இப்படி வருகிறாற் போல் வந்து பிரிகிறாற்போல் பிரிவதில் எத்தனை பணம் செருகிறது. அந்தக் கணக்கைப் பார் !''

''கணக்குக் கேட்கிற பழக்கம் உங்களை விட்டுப் போகாது போல் இருக்கிறதே !''

''எப்படிப் போகும்? என் தொழிலே அது தானே ?''

''அப்போ இதற்கும் வரி போட்டுப் பிடுங்கிக் கொள்வீர்களோ ?''

'' வட்டி போட்டு வாங்கிக் கொள்வேன்!'' கண் சொக்க அவர் பார்த்த பார்வையில் அவள் முகம் செக்கச் சிவந்தது.

'' நீங்கள் தந்த நாலாயிரத்துச் சொச்சத்தையும் பணமாக்கியாகி விட்டது. அதற்கு ஒரு நெக்லஸ்....''

''பேஷாக வாங்கிக் கொள். ஆனால் பூஜை அறையோடு வைத்துக் கொள்!'' என்று மட்டுமே சொன்னார் கனகலிங்கம்.

5

கருணாகரன் மேற்பார்வையில் புலனாய்வுத் துறை படுவேகமாக இயங்கியது. அது தந்த செய்தியைக் கூட்டிக் கழித்துப் பார்த்தபோது புதிர் அவிழ்ந்தது. அவிழ்ந்த நேரத்தில் அது பலருக்கும் அதிர்ச்சியைத் தந்தது.

'நெருங்க முடியாத நெருப்பாகச் செயற்பட்டால் யாரும் அண்டமாட்டார்கள். உத்தியோகம் பார்க்கும் துறையிலும் கண்ணியமான பதவி உயர்வு கிடைக்கும் என்று கணக்குப் போட்டு வேலை செய்திருக்கிறார் கனகலிங்கம். அதே நேரத்தில் மனோஹரிஜானின் துணை கொண்டு ஊர், உலகம் அறிய முடியாதபடி பணம் பண்ணியிருக்கிறார். அது பல்கிப் பெருகிப் பல லட்சமாகியிருக்கிறது' என்பதைக் கண்டு பிடித்தவர் கருணாகரன். கனகலிங்கத்தைப் பிடிப்பதற்கென்றே போஸ்டல் ஆர்டர்கள் வாங்கி மனச்சாட்சித் தொகையாக அனுப்பினார். போஸ்டல் ஆர்டர்கள் வாங்கத் தாம் செலவழித்த அத்தனை பணத்தையும் வட்டியும் முதலுமாக வெளிக் கொணரப் போலிசாருடன் அவர் மனோஹரிஜானின் பூஜை அறைக்குள் நுழைந்தபொழுது அவள் கதறியே விட்டாள்: ''ஆண்டவனே! உனக்குக் கண் இல்லையா? உன்னை நம்பி உன் காலடிகளில் அனைத்தையும் ஒப்படைத்தேனே ! இப்படி என்னைச் சோதிக்கலாகுமா? அவர் வந்து கணக்குக் கேட்டால் நான் என்ன பதில் சொல்வேன் ? தம்பிடி தவறாமல் கணக்கு வைத்திருப்பவராயிற்றே !''

அப்போது கையில் காப்புடன் வந்த கனகலிங்கமோ, 'இத்தனை நாளும் தவறாத என் கணக்கு எப்படித் தவறியது ? இப்படிப் பாம்பின் வாய்த் தவளையாக மாட்டிக் கொண்டு விட்டேனே!' என்று தலையைச் சொறிந்து கொண்டிருந்தார். இப்பொழுது அவர் மூளை உறங்கிக் கொண்டிருந்தது; மனச்சாட்சி விழித்துக் கொண்டிருந்தது!

# அசலான ஸிங்கர்* ஊசிகளில் மட்டுமே ஸிங்கரின் பெயர் உள்ளது.




**ஸிங்கர்*** பெயர் உள்ளதா என்று பார்த்தே ஊசிகளை வாங்குங்கள். அவைதாம் அசலானவை. உடையாமல், 50 லட்சம் தையல்களுக்கும் அதிகமாக சிறப்பாக தைக்கின்றன. **ஸிங்கர்*** ஊசியின் முனை 'மைக்ரோஃபினிஷ்' செய்யப்பட்டுள்ளது. ஒவ்வொரு ஊசியும் அமைப்பில் ஒரு சீராக, தரமுயர்ந்து, தொலியாதது, நம்பகத்துடன் உழைக்கிறது. வெவ்வேறு வகையான தையல்கள் மற்றும் சித்திரத் தையல்களுக் காக பல்வேறு நம்பருள்ள ஊசிகள் கிடைக்கின்றன. அவற்றை எந்த மெஷினிலும் எளிதில் பொருத்தலாம்.

இந்தியாவெங்கும் கிடைக்கிறது.




**ஸிங்கர்** அளிப்பவை சிறந்த பொருட்களே

தயாரிப்பாளர்கள்:

**ஸிங்கர்-டிவிஎஸ்லிமிடட், மதுரை**

வர்த்தக விவரங்களுக்கு தொடர்பு கொள்க:

ஸிங்கர் ஸூயிங் மெஷின் கம்பெனி,

207, டி. என். ரோடு, பம்பாய்-400 001

* ஸிங்கர் கம்பெனியின் டிரேடு மார்க்



# தலைவலியா?

## சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் விரைவில் குணமளிக்கிறது



"தலைவலியைப் போக்க நான் எப்போதும் அனாஸின் சாப்பிடுகிறேன்" என்கிறார், பம்பாயிலுள்ள ஒரு கப்பல் கம்பெனி அதிகாரி திரு. பரமசிவம்.

**சக்தி வாய்ந்தது—** ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது—** திரு. பரமசிவம் போன்ற லட்சக்கணக்கானவர்கள் அனாஸினை நம்புகிறார்கள். டாக்டரின் நம்பகமான மருந்தைப்போல பல மருந்துகளின் கலவையே அனாஸின்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளுவினால் ஏற்படும் வலிகள் மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.

சக்திவாய்ந்த, நம்பகமான

**அனாஸின்**

இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி



Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.

## 10. கோமளத்தின் குழைவும் கோபமும்

டெலிஃபோன் மணி அடித்ததுமே நாகசுந்தரம் தெரிந்து கொண்டார், வீட்டிலிருந்து மனைவி கூப்பிடுகிறாள் என்று. போனை எடுத்துப் பேசத் தயங்கினார். நிச்சயம் கோமளம் எரிமலையாகக் குமுறுவாள். போனை எடுக்காமலிருந்தால், ஆள் இல்லை என்று நினைத்துக் கொள்வாள். அப்படியே நினைத்துக் கொள்ளட்டுமே. ஆனால் இந்த நேரத்தில் நான் எங்கேயும் போக மாட்டேன் என்பதும் அவளுக்குத் தெரியும். வேண்டுமென்றேதான் நான் போனை எடுக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்வாள். சாயங்காலம் அவளிடம் என்ன சொல்லித் தப்ப முடியும்?

நாகசுந்தரம், போனை எடுத்தார். ''ஹலோ.... ஏன் இன்னும் வரவில்லை ?'' என்ற குரலிலேயே கோமளம் எவ்வளவு கோபத்தில் இருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டார் நாகசுந்தரம்.

'' நான் காலையிலேயே சொன்னேனே, புது வழக்கு இன்று தொடங்குகிறது என்று.''

''முக்கியமான வழக்கு நடக்கிறது: நான் வர முடியவில்லை என்று அவர்களிடம் சொல்லேன்.''

''விருந்துக்கு அழைத்துவிட்டு இப்படிச் சொன்னால் சிரிப்பார்கள்.''

'' நான் இங்கிருந்து இப்போது வந்துவிட்டால், கோர்ட்டில் என்னைப் பார்த்துச் சிரிப்பார்களே?''

'' நீங்கள் வரவில்லை என்றால் இங்கே வந்திருப்பவர்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கமாட்டார்களா ?''

'' எப்படியாவது சமாளித்துக் கொள்ளேன்.''

''உங்களுக்கு என்னைப் பற்றிக் கவலை இடையாது. என்னைப் பற்றி யார் சிரித்தால் உங்களுக்கு என்ன?''

''கோமளம்....!'' — அவளைச் சமாதானப் படுத்த முயன்றார்.

''நீங்கள் வரப் போகிறீர்களா, இல்லையா?''




'' எனக்குக் காரணம் தேவை யில்லை. இன்னும் பதினைந்து நிமிடங்களில் நீங்கள் இங்கே வந்து சேர வேண்டும்.''

''மெதுவாகப் பேசேன். அங்கு யார் காதிலாவது விழப் போகிறது.''

''எல்லோரும் மாடியில் இருக்கிறார்கள். நான் பேசுவது கேட்காது. கேட்டால்தான் என்னவாம்? நீங்கள் இப்போது வராமல் இருப்பதைவிடவா அவமானம் வந்துவிடப் போகிறது ?''

''கோமளம்.....'' — நாகசுந்தரம் குழைந்தார்.

''எந்தக் காரணத்தையும் நான் கேட்கத் தயாரில்லை.''

''பாதியில் வழக்கை எப்படி விட்டுவிட்டு வருவது ?''

'' ஏன்? வழக்கை நாளை ஆரம்பித்துக் கொண்டால் என்னவாம்?''

''அது எப்படி முடியும்?''

''எப்படி முடியுமோ, எனக்குத் தெரியாது. இங்கே எல்லோரும் வந்துவிட்டார்கள். உங்களுக்காகக் காத்திருக்கிறார்கள்.''

கோமளத்தின் குரல் கரகரத்தது. கிட்டத்தட்ட அழும் நிலையில் இருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டார்.

'' கோமளம்! புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறாயே. வழக்குக்காக வக்கீல்களும் சாட்சிகளும் காத்திருக்கும்போது, நான் பாதியில் வழக்கை நிறுத்திவிட்டுப் போவது அழகா ?''

''அப்படியானால், நேற்றே திட்டவட்டமாகச் சொல்லியிருக்கலாமே. இவ்வளவு பேரை விருந்துக்கு அழைத்து, என் மானத்தை வாங்கியிருக்க வேண்டாமே?''

கோமளத்தின் குரலில் கோபமும் அழுகையும் கலந்து வருவது தெரிந்தது.

''நான்தான் நேற்றே சொன்னேனே.''

''சரி, எதற்கு வீண் பேச்சு? இப்போது நீங்கள் வரப் போகிறீர்களா, இல்லையா ?''

''கேஸ் ஆரம்பமாகிவிட்டது.....''

''நீங்களும் உங்கள் கேஸும்'' என்று கூறிக் கொண்டே போனைக் கீழே வைத்துவிட்டாள் கோமளம்.

நாககந்தரம் போனை வைத்துவிட்டுச் சோர்வுடன் சாய்வுநாற்காலியில் சாய்ந்தார். அந்த நேரத்தில் அவருடைய வீட்டில் இருபது பேர்களாவது கூடியிருப்பார்கள். அந்த விருந்துக்குக் கோமளம்தான் ஏற்பாடு செய்திருந்தாள். அன்று மாலை நடைபெறும் அவளுடைய புத்தக வெளியீட்டு விழாவை முன்விட்டு அவளுடைய சிநேகிதிகளுக்காக ஏற்பாடு செய்திருந்த விருந்து அது. சிநேகிதிகளுடன் அவர்களுடைய கணவர்களும் வந்திருப்பார்கள். அந்தச் சந்தர்ப்பத்தில் தன்னுடைய கணவரும் அருகில் இருக்க வேண்டும் என்று கோமளம் விரும்புவது நியாயம் தான். ஆனால், அவருக்கு நீதிமன்றத்தில் வேலை இருக்கும் போது.....

வேலையை ஒத்தி வைத்துவிட்டு அவர் போய் விடலாம். ஆனால் வழக்குக்காக வக்கீல்களும், சாட்சிகளும் தயாராக வந்துவிட்டபிறகு ஒத்தி வைத்தால், மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? இப்படி ஏற்கனவே பல தடவைகள் ஒத்தி வைத்துவிட்டுப் போயிருக்கிறார். அது பற்றி வக்கீல் சங்கத்தில் குறை கூறினார்கள் என்ற செய்தி அவருக்கு எட்டியிருந்தது. இப்போது வீட்டில் நடக்கும் விருந்துக்காக நீதிபதி போய்விட்டார் என்று தெரிந்தால், வக்கீல்கள் நிச்சயம் கோபம் அடைவார்கள்.

ஏற்கனவே அவர்மீது பல குற்றச்சாட்டுகளை வக்கீல் சங்கம் சுமத்திக் கொண்டிருந்தது. அவர் மீது கண்டனத் தீர்மானம் போடக்கூட வக்கீல் சங்கம் முடிவெடுத்திருந்ததைப் பற்றி அவருக்குத் தெரியும். ஒரு நீதிபதி மீது கண்டனத் தீர்மானம் போடுவது என்பது எவ்வளவு அவமானகரமான நடவடிக்கை. இந்தச் சமயத்தில், அவர் மத்தியானம் நீதிமன்றத்துக்கு வராமல், வீட்டு விருந்தைப் பெரிதாக எண்ணிக் கொண்டு போவது நல்லதில்லை. இதை உணர்ந்த நாககந்தரம் மனம் குழம்பினார்.

அதே சமயம் கோமளத்தின் கோபதாபத்தை எண்ணியும் அவர் தடுமாறினார். இந்த வயதில் இப்படி ஒரு கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு தவிக்க வேண்டியிருக்கிறதே என்று மனம் புழுங்கினார். உடலுக்கும் உள்ளத்துக்கும் ஆதரவு வேண்டும் என்ற தவிப்புத்தான் ஐம்பது வயதில் அவரை இரண்டாவது முறையாகத் திருமணம் செய்யத் தூண்டியது.

முதல் மனைவி மூலமாகக் குழந்தை இல்லை. அவள் இறந்த பிறகு, கிட்டத்தட்ட ஆறு ஆண்டுகள் தனிமையிலேயே வாழ்க்கையைக் கழித்தார். தனிமை அவரை வாட்டியது. குழந்தை இல்லையே என்ற ஏக்கம். கோமளத்தை மணந்து ஆண்டுகள் நான்காகியும் வாரிசு கிடைப்பதற்கான அறிகுறி இல்லை.

இதை நினைத்தபோது, நாககந்தரம் தமக்குள்ளேயே நகைத்துக் கொண்டார்.

தசரதச் சக்கரவர்த்தி, இக்ஷ்வாகு வம்சத்துக்கு வாரிசு அற்றுப் போய்விடுமே என்று தவித்த மாதிரி. ஒரு தவிப்பா இது? என்னுடைய வாரிசு எந்த நாட்டை ஆளப் போகிறான்? இயற்கை வேகங்களுக்கு அடிமைப் பட்டு அதை வாரிசு தேவை என்னும் பாசாங்



இல் மறைத்துச் செய்து கொண்ட கல்யாணம் தானே இது? கோமளத்தின் குடும்பம், வறுமையில் வாடப் போய் அவளுடைய அப்பன், பெண்ணை விற்பது போல் அவளை எனக்குக் கொடுத்தான். ஆனால் கோமளத்தின் மீது என்ன குறை சொல்ல முடியும்? கொஞ்சம் பிடிவாதக்காரி. என் மீது அக்கறையோ அன்போ இல்லாமலா இருக்கிறாள்? ஆனால் அவளுடைய விருப்பங்கள் அனைத்துக்கும் ஈடு கொடுக்க எனக்கு நேரமோ தெம்போ இல்லையே!

அடேயப்பா! அவளுடைய ஆசைக்குத் தான் கணக்கு ஏது? அவைகளையெல்லாம் நான் ரசிக்கக்கூட முடியவில்லையே. ரசிக்கக் கூடிய வயதைத் தாண்டிவிட்டேனே, என்ன? என்ன இருந்தாலும், இத்தனை வயதுக்கு மேல் நான் கல்யாணம் செய்து கொண்டது தவறு தான். ஏழெட்டு மாதங்களுக்குமுன் ஜவுளிக் கடையில் சொன்னானே.... சே, அதை நினைக்கும்போது மனம் எவ்வளவு சங்கடப்படுகிறது? உண்மையிலேயே எனக்குக் குழந்தை இருக்குமானால், கோமளத்தைவிட வயதில் முதிர்ந்த ஒரு மகள் இருப்பாளே. பேரக் குழந்தைகள்கூடப் பிறந்திருக்கும். அந்த ஜவுளிக் கடைக்காரன் சொன்னதில் என்ன தப்பு? அவன்மீது எனக்கு ஏற்பட்ட கோபத்துக்கு என்ன நியாயம்?

நாகசுந்தரத்தின் மனத்தில் எண்ணக் குவியல்கள் நிறைந்தன —

"சார்! இந்தப் புடவை உங்கள் மகளுக்குப் பொருத்தமாயிருக்கும்" என்று ஜவுளிக் கடைக்காரன் சொன்னதும் நாகசுந்தரத்தின் மனம் கூசிக் குறுகிவிட்டது! கடைக்கண்ணால் கோமளத்தைப் பார்த்தார். அவளுடைய முகம் ஒரு கணத்தில் வாடிவிட்டது. கடைக்காரன் சொன்னதைக் கவனியாதவளைப் போல் பாசாங்கு செய்தாள். நாகசுந்தரத்தின் மனம் தவித்தது. ஜவுளிக் கடையிலிருந்து வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்த பொழுது, இருவருமே பேசிக் கொள்ளவில்லை. இருவருடைய மனத்தையும் ஜவுளிக் கடைக்காரனின் வார்த்தைகள் புண்படுத்தியிருந்தன. அதிகமாகப் பாதிக்கப்பட்டவர் நாகசுந்தரம்தான். கோமளத்தைப் பார்க்கக் கூடத் தெம்பிழந்து விட்டார்.

இரவு, நாகசுந்தரம் விரைவில் படுத்துக் கொண்டார். அவர் பக்கத்தில் போய் அமர்ந்த கோமளம் கேட்டாள்: "ஏன் ஒரு மாதிரி இருக்கிறீர்கள்?"

கண்களை மூடிக் கிடந்த நாகசுந்தரம், கண்களைத் திறக்காமலேயே அவருடைய மார்பில் கிடந்த அவள் கரத்தைப் பற்றிக் கொண்டார். அவருடைய கை நடுங்கியதை அவள் உணர்ந்தாள். வாஞ்சையோடு அவருடைய தலையை வருடினாள்.

"எனக்குத் தெரியும், நீங்கள் ஏன் சோர்வாய் இருக்கிறீர்கள் என்று!" என்று அவருடைய முகத்துக்குப் பக்கத்தில் குனிந்தபடி சொன்னாள். கண்களை விழித்த நாகசுந்தரம், கலக்கத்துடன் அவளுடைய கண்களை உற்றுப் பார்த்தார்.



அவள் சிரித்தாள். அந்தச் சிரிப்பு, அவருடைய மனப் புண்ணை வருடி, வலியைப் போக்குவதா யிருந்தது.

"அந்த முட்டாள் ஜவுளிக் கடைக்காரன் சொன்னதை நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்" என்றாள் கோமளம் சிரித்துக் கொண்டே.

"அவன் சொன்னதில் என்ன தப்பு?" என்றார் நாகசுந்தரம். அவளுடைய கையை வருடினார்.

"யாரும் எதை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம்."

"என்னைக் கல்யாணம் செய்து கொண்டதால் உனக்குத்தான் என்ன பெருமை?"

"ஏன் இல்லை? நான் பெருமை அடையத்தான் செய்கிறேன்" என்று கோமளம் கூறியதும் நாகசுந்தரம், அவளுடைய கையைத் தம்முடைய இரு கரங்களாலும் இறுகப் பற்றிக் கொண்டு கேட்டார்: "உண்மையைச் சொல்; என்னோடு வெளியே வர உனக்குக் கூச்சமாயில்லையா?"

கோமளம் திகைத்துப் போய் அவரை உற்றுப் பார்த்தாள். அவருடைய மார்பில் தலையைச் சாய்த்துக் கொண்டு சொன்னாள்: "சத்தியமாகச் சொல்கிறேன், உங்களோடு சேர்ந்து செல்வதில் எனக்கு எவ்வளவு பெருமையா யிருக்கிறது, தெரியுமா? நான் உங்கள் பக்கத்தில் இருக்கும்போது, என்னுடைய சிநேகிதிகள் என்னைப் பொறாமையோடு பார்ப்பதை நான் கவனிக்காமல் இல்லை. மற்றவர்கள் என்னைப் பார்த்துப் பொறாமைப்படும்படியான ஒரு வாழ்க்கை எனக்குக் கிடைத்திருக்கிறதே, இதைவிட எனக்கு என்ன வேண்டும்? உண்மையில் உங்களுக்குத்தான் என் மீது சலிப்புத் தோன்றியிருக்க வேண்டும். இல்லையா?"

இதைக் கேட்டதும் நாகசுந்தரத்தின் மனம் ஆனந்தத்தால் விம்மியது. அவளை அணைத்துக் கொண்டு பேசினார்: "உன் மீது எனக்குச் சலிப்பு ஏற்படுமா? நீ என் பக்கத்திலேயே இருந்தால் எனக்கு வேறு ஒன்றுமே வேண்டாமே."

அவருடைய ஆலிங்கனத்திலும் வார்த்தையிலும் பொங்கிய அன்பும், ஆசையும் அவளை மூச்சுத் திணற வைத்தன. ஒரு குழந்தையைப் போல் காதுக்குள் இரகசியமாகச் சொன்னாள்:

"நம்முடைய கல்யாணத்துக்குப் பிறகுதான் சந்தோஷம் என்றால் என்னவென்பதே எனக்குத் தெரியும். இப்போது நான் எவ்வளவு ஆனந்தமாயிருக்கிறேன், தெரியுமா? உங்களுக்கு எப்படி......?"

"கோமளம்.... கோமளம்...!" என்று கொஞ்சிய நாகசுந்தரத்தின் பிடி இறுகியது.

எவ்வளவுதான் கோமளம் அவர்மீது வாஞ்சையாக இருந்தாலும், அவளுக்கு உரிய வாழ்க்கையைத் தம்மால் கொடுக்க முடிகிறதா என்னும் ஆராய்ச்சியிலேயே நாகசுந்தரத்தின் மனம் ஓய்ந்துவிடும். அவளை ஒத்த ஓர் இளைஞனுடன் அவளுக்குக் கிடைக்கக் கூடிய வாழ்க்கையைத் தம்மால் நிச்சயம் கொடுக்க இயலாது என்னும் உணர்வுதான் அவருடைய மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. என்னதான் அவள் அவரை விரும்புவதாகச் சொன்னாலும், அவருடைய மனம் மட்டும் ஏனோ அதை ஒப்புக் கொள்ள மறுத்துக் கொண்டிருந்தது.



தம்முடைய பணத்தாலும், நீதிபதி பதவியாலும் அவளை விலைக்கு வாங்க முடிந்தது; அவளுடைய உடலுக்கு மட்டும்தான் தாம் அதிகாரி; உள்ளத்தை ஆட்கொள்ளும் அருகதை தமக்கு இல்லை என்னும் எண்ணங்கள் அடிக்கடி அவரைச் சோர்வடையச் செய்தன.

சில சமயங்களில் அவளை மிகுந்த பச்சாத்தாபத்தோடு பார்ப்பார். கிளியை விலைக்கு வாங்கிக் கூண்டில் அடைத்திருக்கிறோம் என்று நினைத்துக் கொள்வார். அவள் காட்டிய அன்பு, பரிவு, பணிவிடை எல்லாமே பாசாங்கோ என்றுகூட அடிக்கடி சந்தேகப்

# "மொரமொரப்பாகவும் அதிமெல்லியதாகவும் வடாம் தயாரிக்கும் இரகசியம், பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்"

என்கிறார் திருமதி லட்சுமி சாமா, 'லோரெண்டோ', மவுண்ட் ப்ளஸண்ட் ரோடு, பம்பாய் – 6.



கார்ன் ப்ராடக்ட்ஸ் தேர்ந்தெடுத்த பரிசு - பெற்ற பக்குவ முறை

## வடாம்

தயாரிக்க உதவுவது பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்




பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் சமோசா, பட்டூஸ் ஆகியவற்றை அதிமெல்லியதாகவும் மொரமொரப்பாகவும் ஆக்குகின்றது. (இரண்டு கோப்பை சாதா மாவுக்கு 1 டேபிள் ஸ்பூன் அளவு போதுமானது.) குழைவான சுவைமிகு சூப், கிரேவி ஆகியவற்றைக் கெட்டியாகத் தயாரிக்க உதவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர் இளங் குழந்தைகள், நோயாளிகள் ஆகியோருக்குத் தெம்பு தரும் ஆரோக்கிய ஊட்டவும் சிறந்தது. அருமையான பொருட்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப்படுத்தப் பட்டதால் கார்ன்ஃப்ளவர்களில் மிகவும் சிறந்தது, பிரவுன் & போல்ஸன். அட்டைப் பெட்டிகளிலும் கிடைக்கிறது.

**பக்குவ முறை :**

1 கோப்பை பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவர்
6 கோப்பை தண்ணீர்
1 முதல் 1½ கோப்பை மோர்
4-5 பச்சைமிளகாய்
சிறிது பெருங்காயம்
1 மேசைக் கரண்டி (தலைதட்டிய அளவு) உப்பு (அல்லது சுவைக்கு ஏற்ற அளவு.)

1 தண்ணீரைக் கொதிக்க விடவும். அடுப்பின் சூட்டைக் குறைக்கவும். பிரவுன் & போல்ஸன் கார்ன்ஃப்ளவரை மோருடன் கலக்கவும். தண்ணீர் சேர்க்கவும். நன்கு கிளறவும். அத்துடன் உப்பு, பெருங்காயம் மற்றும் அரைத்த மிளகாயைக் கூட்டவும். சில நிமிடங்கள் கொதிக்க விடவும். பின்னர் கலவையைக் குளிர விடவும்.

2 சிறு சுத்தமான போலித்தின் தாளை வெய்யிலில் பரப்பவும். அதன் மீது ஒரு மேசைக்கரண்டியளவு கலவையிலிருந்து எடுத்து ஊற்றவும். இவ்வாறே ஒவ்வொரு மேசைக் கரண்டியாக கலவை முழுவதையும் தாளின்மீது இடைவெளி விட்டு ஊற்றவும். மாலைவரையில் வெய்யிலில் காயட்டும். மறு நாள் காலை தாளிலிருந்து வடாம் பிரித்து எடுத்து, பெரிய தட்டில் புரட்டிப் போடவும். முற்றிலும் காயும் வரையில் இரண்டொரு நாட்களுக்கு வெய்யிலில் நன்கு உலர விடவும்.

3 காற்றுப்புகா டப்பாவில் வடாம் எடுத்து வைக்கவும். தேவைப்படி எண்ணெயில் பொரிக்கவும். வாணலியில் எண்ணெயை விட்டு சூடாக்கி, வடாம் பொரிக்கவும். பழுப்பாக மாறும் முன்பு வடாம் பொரித்து எடுக்கவும்.

**உங்கள் சமையல் உன்னதமாய் இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**



**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீனிவாஸ் ஹவுஸ், எச். சோமானி மார்க், பம்பாய் – 400 001.

OBM 0621 R-TM

பட்டார். அவளுடைய வாழ்க்கையில், தாம் குறுக்கிட்டுவிட்டதாக அவர் எண்ணியதால், அவளுடைய மனம் கோணக் கூடாது என்பதில் மிகவும் அக்கறையோடு இருந்தார். சில வேளைகளில் அவளுடைய பிடிவாதமும், முரண்டும், கண்ணீரும் அவருக்குக் கோபத்தையும், எரிச்சலையும் ஏற்படுத்தியதுண்டு. ஆனால், மறு கணமே அவளைச் சந்தோஷமாக வைத்துக் கொள்ள வேண்டிய தம் கடமையை எண்ணி மனம் நெகிழ்ந்து விடுவார்.

அவள் கதை எழுதுவதோ, பல இடங்களில் சொற்பொழிவாற்றச் செல்வதோ அவருக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும், அவளுடைய சந்தோஷத்துக்காக அதைப் பொறுத்துக் கொண்டார். வெளி இடங்களில் பலர் பலவிதமாகப் பேச நேரும் என்பதற்காகவே கூடுமானவரை அவளோடு பொது இடங்களுக்குப் போவதைத் தவிர்த்தார். ஆனால் கோமளத்தின் பிடிவாதத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் அவளோடு செல்ல வேண்டிய நிர்ப்பந்தங்களும் ஏற்பட்டன.

அன்று வீட்டில் அவள் விருந்துக்கு ஏற்பாடு செய்ததை அவர் விரும்பவில்லை. கோமளத்தின் கதைப் புத்தகம் ஒன்றுக்கு அன்று ஒரு வெளியீட்டு விழாவை நடத்துவதாய் இருந்தார், நவரசம் பத்திரிகையின் ஆசிரியர் சந்தானம். அதை முன்னிட்டுச் சிநேகிதிகளுக்கு விருந்தளிக்க விரும்பினாள், கோமளம். அவளுடைய உற்சாகத்தைக் கெடுக்க மனமில்லாமல் சம்மதித்தார் நாக சுந்தரம்.

இப்போது அந்த விருந்து, அவருடைய வீட்டில், அவர் இல்லாமலேயே நடைபெறத் தொடங்கிவிடும். கோமளம் மிகுந்த ஏமாற்றத்துக்குள்ளாகியிருப்பாள். சிநேகிதிகளும், அவர்களுடைய கணவர்களும் கூடி ஆரவாரமாக இருக்கும் வேளையில் அவளுக்குத் துணையாகத் தாம் இல்லாதது அவளுக்கு எவ்வளவு வேதனையை அளிக்கும்.....

ஃபோனில் பேசியபோது அவளுடைய குரலில் தொனித்த அழுகையையும், ஏமாற்றத்தையும் நினைவுபடுத்திப் பார்த்தார். இருப்புக் கொள்ளவில்லை. மனம் தவித்தது. உடல் பரபரத்தது. கண்களைத் திறந்து பார்த்தார். சுவர்க் கடிகாரத்தில் மணி, இரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது. அவசரமாகச் சாய்வுநாற்காலியில் இருந்து எழுந்தார். பெஞ்ச் கிளார்க்கைக் கூப்பிட்டு, மத்தியானம் நடைபெற வேண்டிய வழக்கைத் திங்கட்கிழமைக்கு ஒத்தி வைத்துவிட்டதாகச் சொல்லி விட்டுத் தம்முடைய காரை நோக்கி விரைந்தார்.

நீதிபதியின் போக்குப் புரியாமல் சற்று நேரம் அவர் போவதையே பார்த்துக் கொண்டு நின்ற பெஞ்ச் கிளார்க், ''கிழட்டு வயதில் கல்யாணம் செய்து கொண்டால் இப்படித்தான் திடீர் திடீரென்று புத்தி மாறும்'' என்று முனகிக் கொண்டே, விஷயத்தை நீதிமன்றத்தில் காத்திருந்த வக்கீல்களிடம் தெரிவிப்பதற்காக விரைந்து சென்றார்.

(தொடரும்)



நேபாளம், காட்மண்டுவில் இந்திய கலாசாரத் தொடர்பு ஸ்தாபனத்தின் ஆதரவில் சுதந்திர தினத்தன்று ஸ்ரீமதி வைஜயந்திமாலா நடன விருந்தளித்தார். படத்தில் இந்தியத் தூதுவர் ஸ்ரீ ரங்கோத்ரா தம்பதி, நேபாள மன்னர், ராணி, பாலி-வைஜயந்தி தம்பதி காட்சியளிக்கின்றனர்.



வேலூர் குழந்தைகள் பூங்காவின் ஒரு பகுதியான டயர் பார்க்கில் உள்ள டயர் மிருகம் தான் இது. குழந்தைகள் இதன் மீது ஏறி விளையாடுவார்கள். வீணான டயர்களால் உருவானது. இவற்றைச் சேகரிக்கப் பல நாட்கள் பிடித்ததாம்.
—ச. வே. ரா. மோகன்

தானிருப்பதையே
நினைவுறுத்தாது
தன்னிகரற்ற நிம்மதி தரும்...
அதுவே கம்ஃபிட் சானிடரி
டவலின் தனிச் சிறப்பு

பெண்ணென்று சொன்னாலே பெருந்துன்பம்
சில நாளில்; கம்ஃபிட் ஒன்றுதான் கவலையை
மறக்கச் செய்யும். பத்துமடங்கு ஈரத்தைப்
பாங்காக உறிஞ்சும்...மற்றவற்றைவிட
ஐந்துமடங்கு அதிவிரைவில். மென்மையோ
மென்மை...முன்னே முட்டி நிற்காது, பின்னால்
களைந்தெறியும் தொல்லையில்லை—காரணம்,
நீரிலே கரைந்து விடலாம் நிம்மதியாக.
அதுவே கம்ஃபிட்!

கம்ஃபிட் சானிடரி டவல் கவலையை மறந்து
களிப்புடன் இருக்கச் செய்யும்!




கிறிஸ்டியன் ஹேடன் (இந்தியா) லிட்., [illegible], கோவா கம்பெனியின் தரமான தயாரிப்பு.

AIYARS-CH.4 TM

# பொழுது போக!

தொகுப்பு: சே. வேங்கடராமன்




பங்குனி உத்திரத்தன்று சந்திர வெளிச்சம் நேராக லிங்கத்தின்மீது விழும்படியாகத் திருவையாற்றுக்கு அருகில் திங்களூர் என்ற சிவஸ்தலத்தில் உள்ள ஆலயம் அமைக்கப்பட்டுள்ளது.

ஒரு டன் நிறையுள்ள தங்கத்தைப் பூமியின் மையப் பகுதிக்கு எடுத்துச் சென்று அதை அங்கு நிறுத்துப் பார்த்தால் கனமேயிராது.



நான்கு அவுன்ஸ் தண்ணீரில் ஒரு டீஸ்பூன் தேன் கலந்து சாப்பிட்டால் உடல் பருமன் குறையத் தொடங்கிவிடும்.



மிருகங்களில் மிகவும் வேகமாக ஓடக்கூடியது சிறுத்தையாகும். மணிக்கு 112 கிலோமீட்டர் ஓடும். ஆனால் கொஞ்ச தூரம் ஓடியதும் அது களைத்துவிடும்.



மனத்தில் நினைவுகள் அதிகமாகத் தேங்கி விட்டால் அது வழிந்து செல்லும் வடிகால்தான் கனவு.



அன்பு, மன உறுதி, நிதானம், சமயோசித புத்தி, சகிப்புத் தன்மை ஆகிய ஐந்து குணங்களும் ஒரு குடும்பப் பெண்ணிடம் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் திருமணத்தின்பொழுது ஐந்து முகமுள்ள குத்து விளக்கைக் கொடுக்கிறார்கள்.



ஆஸ்திரேலியாவில் உள்ள காடுகளில் ஓணான் போன்று ஒரு பிராணி இருக்கிறது. அதன் பெயர் டுவாடரா. அதற்கு நெற்றியில் கண் இருக்கிறது.

மேநாடுகளில் திருமணத்தின் பொழுது மோதிரம் மாற்றிக் கொள்கிறது ஏன் தெரியுமா? மோதிரம் வட்ட வடிவமானது. அதற்கு முதலோ முடிவோ கிடையாது. தங்கள் அன்பும் காதலும் அப்படியே நிரந்தரமாக இருக்க வேண்டும் என்றுதான் மோதிரம் அணிகிறார்கள்.



கோவிலின் முன்னே வாசற்படியில் இருப்பதற்குக் கோபுரம் என்றும் கர்ப்பக்கிருகத்தில் சுவாமி இருக்கும் இடத்துக்கு விமானம் என்றும் பெயர். நாம் இரண்டையுமே தவறாகக் கோபுரம் என்று கூறுகிறோம்.






டி.கே.டி. துரைராசன்

நெக்லஸ்:

இது அசல் தங்கமா அல்லது போலியா? விலை எவ்வளவு இருக்கும்? அசலாக இருந்தால் ஆயிரத்துக்கும் மேலே போகும். போலியாக இருந்தால்? ஹூம்... அதற்கு மதிப்பு என்ன வேண்டிக் கிடக்கிறது?

சுசீலா அந்த நெக்லஸையே திருப்பித் திருப்பிப் பார்த்தாள். "என்ன சுசீ... அப்படிப் பார்க்கிறே? இது தங்கமா இல்லையா என்று?" என்று கேட்டான் ஜெயராமன்.

சுசீலாவுக்குச் 'சுருக்' என்றது. தன் மனத்தில் ஓடிய கள்ள எண்ணத்தை — சந்தேகத்தை இவர் எவ்வளவு தெளிவாகக் கண்டுபிடித்து விட்டார்!

"நல்லா இருக்கு... உங்க மேலே எனக்கு அப்படியொரு சந்தேகம் வருமா?" என்று ஒரு பொய்யான கேள்வி கேட்டாள்.

"இல்லே, என்மேலே உங்களுக்குத் திடீர்னு இவ்வளவு அன்பு எப்படி வந்ததுன்னுதான்" என்று அந்த நெக்லஸை அவள் அணிந்து கொள்ளப் போனபோது....

"நோ... நோ.... நான்தான் அதை உன் கழுத்திலே போட்டு விடுவேன் - தாலி மாதிரி" என்று கூறி அதை வாங்கிப் பின்புறமிருந்து அவள் கழுத்தில் அணிவித்தபடியே ஜெயராமன் கேட்டான்:

"உன்மேலே எனக்கு அன்பு இல்லேன்னு நினைக்கிறியா சுசீ?"

அவள் பதில் பேசவில்லை. ஜெயராமனின் அன்பு அவளுக்குத் தெரியும். இருந்தாலும் அது வெளியுலகுக்குத் தெரியாத — மற்றவர்களால் அங்கீகரிக்கப்படாத அன்புதானே!

"எங்கே, இப்படித் திரும்பு!"

அவள் திரும்பினாள். சுசீலாவின் கழுத்தில் அணிவித்த பிறகு அந்த நெக்லஸ் முன்பு இருந்ததை விடவும் அழகாக இருந்தது.

"யூ லுக் பியூட்டிஃபுல்..." என்றான், ஜெயராமன் அவளைத் தன்னோடு சேர்த்து அணைத்தபடி. அந்த அணைப்பில் அவள் உடல் சிலிர்த்தது. உணர்வுகள் கிளர்ந்தன.

"சுசீ! நான் இந்த நெக்லஸை வாங்கினதுக்கு ஒரு பெரிய காரணம் இருக்கு. தெரியுமா?"

"என்னவாம்?"

"நேற்றுவரையில் நான் என் கம்பெனியில சீஃப் எக்ஸிக்யூடிவ்வாக மட்டும்தானே இருந்தேன்? ஆனால் இன்று முதல் மானேஜிங் பார்ட்னர்..."

இந்த இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் அவளுக்குப் புரியவில்லை.

"அப்படீன்னா?" என்று கேட்டபடி அணைப்பிலிருந்து மீண்டு நின்றாள்.

"நேற்று வரையில் நான் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்த ஒரு வேலைக்காரன். ஆனால் இன்றிலிருந்து கம்பெனியின் பாகஸ்தர்களில் ஒருவன். லாபத்தில் எனக்கும் ஒரு பங்கு உண்டு."

அவள் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. அது ஒரு பெரிய கம்பெனி. இந்தியா முழுவதும் கிளை பரப்பியுள்ள கம்பெனி என்று

அவனுக்குத் தெரியும். அதனுடைய லாபத்தில் பங்கு என்றால்...!

நினைக்க நினைக்க அவனுக்கு நெஞ்சு பூரித்தது. ஒரு குழந்தையைப் போல் ஜெயராமனைக் கட்டியணைத்துக் கொண்டாள்.

''இன்று காலையில்தான் அக்ரிமெண்ட் கையெழுத்தாச்சு. அப்போது நான் யாரை நினைத்தேன் தெரியுமா?''

''உங்கள் மனைவியை...''

''இல்லே.''

''பிறகு?'' என்று கேட்டபடி முகத்தை நிமிர்த்திப் பார்த்தாள் சுசீலா.

''உன்னைத்தான்'' என்று அவள் நெற்றியில் முத்தமிட்டான் ஜெயராமன். ''உனக்கும் எனக்கும் தொடர்பு ஏற்பட்டு ஒரு வருஷம் ஆகிறது. இந்த ஒரு வருஷத்தில் நான் படிப்படியாக உயர்ந்து வந்திருக்கிறேன். இந்த உயர்வுக்குச் சிகரம் வைத்தமாதிரி இன்று மானேஜிங் பார்ட்னர் ஆகிவிட்டேன். இன்னும் கொஞ்ச நாட்களில் மானேஜ்மெண்ட் பயிற்சிக்காக என்னை அமெரிக்காவுக்கு அனுப்பப் போகிறார்கள். எல்லாம் உன்னுடைய அதிர்ஷ்டம்... உன்னைத் தொட்ட ராசி!''

ராசி!

அந்த வார்த்தை சுசீலாவைக் கடந்த காலத்தை நோக்கித் திடுமென்று இழுத்துச் சென்றது.

சுசீலா தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டாள்.

அவளுடைய இயற்கையான அழகுக்கும் கவர்ச்சிக்கும் அலங்காரம் தேவையில்லைதான். இருந்தாலும் ஒரு டைரக்டரைப் பார்க்கப் போவதென்றும் சாதாரணமாகவா போவது?

''சீக்கிரம்... டைரக்டர் 'வெயிட்' பண்ணிக்கிட்டிருப்பார்...'' என்று துரிதப்படுத்தினான் எத்திராஜு. நடிகனாக வேண்டுமென்ற கனாக் கோட்டைகளுடன் சினிமா உலகுக்கு வந்து கடைசியில் ஒரு சாதாரண அஸிஸ்டெண்ட் டைரக்டராக ஆகிவிட்டவன் அவன்.

டாக்ஸி நின்றுகொண்டிருந்தது. அதன் பின் சீட்டில் சுசீலாவுடன் ஒட்டினாற் போல் மிக உரிமையுள்ளவனாக அமர்ந்து கொண்டான் எதிராஜ்.

அதில் அவளுக்குக் கூச்சமோ ஆட்சேபணையோ இல்லை. அவள் சிந்தனை யெல்லாம் எத்திராஜு அறிமுகப்படுத்தப் போகும் அந்த டைரக்டரைப் பற்றித்தான்.

அவரைப் பற்றி அவள் முன்பின் கேள்விப்பட்டதில்லை. ஆனால் எதிராஜுதான் வானளாவப் புகழ்கிறான். 'ஜனாதிபதியின் அடுத்த தங்கப் பதக்கம் அந்த டைரக்டருக்குத்தான்! இன்னும் கொஞ்ச நாட்களில் சத்யஜித் ரேக்கு நிகராக வந்து விடுவாராம்!'

அது சரி. சத்யஜித் ரே என்றால் யார்?

அவளுக்குத் தெரியாது. நடிப்பு — பாட்டு — முகவெட்டு — நாட்டியம்... இவை எதைப் பற்றியுமே அவளுக்குத் தெரியாது. ஏதோ வழி தவறி — அதாவது வாழ்க்கையில் தவறி — சினிமா உலகுக்கு வந்து விட்டவள் அவள். இனிமேல் எது எப்படியானால்தான் என்ன?

டாக்ஸி போய்க் கொண்டிருந்தது. எத்திராஜு பேசினான்.

''இதோ பார், சுசீ... நீ மட்டும் அந்த டைரக்டர் விருப்பப்படி யெல்லாம் நடந்துகிட்டா இன்னும் கொஞ்ச நாளிலே உன்னை ஆல் இண்டியா ஸ்டார் ஆக்கிடுவார்.''

அவள் பேசாமல் இருந்தாள்.

புரொடக்‌ஷன் ஆபீஸ் வந்தது. சிறிய வீடுதான். ஆனால் மாடி வீடு. எத்திராஜு அவளை அழைத்துக் கொண்டு மாடிக்குப் போனான். டைரக்டருக்கு அறிமுகப்படுத்தினான். அவளுக்கு நன்றாக நடிக்கத் தெரியும்



என்று பொய் சொன்னான். பிறகு கீழே இறங்கி வந்து விட்டான்.

அதற்குப் பிறகு?

நடிகையாக வேண்டும் என்று வந்த சுசிலா அந்த டைரக்டருக்கு மனைவியாகி, கடைசியில் புரொடக்ஷன் ஆபீசுக்கே குடியேறி விட்டாள்.

மாடியில் குடும்பம். கீழே ஆபீஸ்.

அவள் ஏமாற்றமடைந்ததாகத் தெரியவில்லை. காரணம் அவளுக்குத் தேவை ஒரு பாதுகாப்பு. கடைசிவரையில் அன்பு காட்டி ஆதரிப்பதற்கு ஓர் ஆண் துணை.

அந்த டைரக்டரிடம் அன்புக்குக் குறை வில்லை. ஆசைக்கும் அளவில்லை. ஆனால் ஏற்கெனவே கல்யாணமாகி இரண்டு குழந்தைகளாம். அது அவளை உறுத்தியது. இருந்தாலும் அதை அந்த டைரக்டரே பெரிதாக எடுத்துக் கொள்ளாதபோது அவள் ஏன் மனத்தைப் போட்டுக் குழப்பிக் கொள்ள வேண்டும்?

வஞ்சகமில்லாமல் — வருத்தம் தெரியாமல் வாழ்க்கை நடந்தது.

ஒரு நாள்.

''சுசீ... சுசீ டியர்!...'' என்று மகிழ்ச்சியோடு கூவி அழைத்தபடியே மாடிக்கு ஓடினார்.

சமையல் வேலையிலிருந்த சுசிலா விவரம் புரியாமல் பரபரப்படைந்தாள்.

''மை டார்லிங்... மை லக்கி டார்லிங்...'' அவளை அணைத்துக் கொண்டு நெற்றியில் முத்தமிட்டார் டைரக்டர்.

''யூ நோ... நான் டைரக்ட் செய்த படத்துக்கு இந்த வருஷம் ஜனாதிபதியின் தங்கப் பதக்கம் கிடைத்திருக்கிறது. கோல்ட் மெடல் ஃபார் எ டமில் ஃபிலிம்...'' என்று உற்சாகத்துடன் ஏதேதோ சொல்லிக் கொண்டு போனார் டைரக்டர்.

சுசிலாவுக்கு எதிராஜுவின் நினைவு வந்தது. அவன் சொன்னது நிஜமாகி விட்டது. தங்கப் பதக்கம்.... யாரோ ஒரு ரே. அவளுக்கு நெஞ்சு குளிர்ந்து போயிற்று. டைரக்டரை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டாள்.

''மை லக்கி டார்லிங்... ஐ நோவ் பிகம் அன் ஆல் இண்டியா டைரக்டர்... எல்லாம் உன்னுடைய அதிர்ஷ்டம்... உன்னைத் தொட்ட ராசி!''

ராசி!

இப்போது அதே வார்த்தையை ஜெயராமன் சொல்கிறான். உள்ளூர அவள் நெஞ்சு நடுக்கம் கண்டது. அதை மறைத்துக் கொள்ளும் பாவனையில்—

''கொஞ்சம் பொறுங்க... ஸ்வீட் கொண்டாறேன்'' என்று சமையற்கட்டுக்குள் ஓடினாள். கை நிறையச் சர்க்கரையை அள்ளிக் கொண்டு வந்து ஜெயராமனின் வாயில் கொட்டினாள்.

இதே போலத்தான் அன்று அந்த டைரக்டரின் வாயிலும் சர்க்கரையைக் கொட்டித் தன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டாள்.

ஆனால் அந்த மகிழ்ச்சி எத்தனை நாளைக்கு...?

அதே டைரக்டர் இந்திப் படத்தை டைரக்ட் செய்வதற்காக பம்பாய்க்குப் போய் — அங்கு ஒரு நடிகைக்கு அடிமையாகி, அங்கேயே நிரந்தரமாகக் குடியேறிய பிறகு ஞாபகமாகத் தான் தாலி கட்டிய மனைவியையும் குழந்தைகளையும் மட்டும் பம்பாய்க்கு அழைத்துக்கொண்டாரே தவிர... சுசிலாவை மறந்துவிட்டார்.

சுசிலாவும் தன் ஏக்கத்தையும் ஏமாற்றத்தையும் மென்று விழுங்கிக் கொண்டு எப்படியோ வாழ்ந்து வந்தபோது எதிர்பாராத விதமாக ஜெயராமனின் உறவு!

விதி, அவளை ஒரு பந்து போல் கைக்குக் கை விளையாடக் கொடுத்தது.

சர்க்கரையை மென்று விழுங்கிவிட்டு ஜெயராமன் கூறினான்:

''சுசீ! அடுத்த மாதமே நான் பயிற்சிக்காக அமெரிக்காவுக்குப் புறப்படுவேன். திரும்பி வர ஏழெட்டு மாதங்களாகும். உனக்கு என்னென்ன வேண்டுமோ இப்போதே ஒரு லிஸ்ட் கொடுத்துவிடு. தேவையான பணம் கொடுத்துவிட்டுப் போகிறேன். லுக் சுசீ. நான் அமெரிக்காவுக்குப் புறப்படுவதற்குள் ஏகப்பட்ட வேலைகளை முடித்துவிட்டுப் போக வேண்டும். இரவு பகலாக ஆபீஸிலேயே இடப் பேன். அதனால் இனிமேல் நான் இங்கு வருவேன் என்று நீ எதிர்பார்க்கக் கூடாது. இப்போதுகூட நண்பர்கள் எல்லோரும் சேர்ந்து காக்டெயில் பார்ட்டி கேட்டார்கள். ஆறு மணிக்கு வருகிறேன் என்று சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். நான் புறப்படட்டுமா?''

அவளுக்கு நெஞ்சு கனத்தது. ஏனோ அந்த மகிழ்ச்சியில் அவனைப் பிரிவதற்கு அவளுக்கு மனமில்லை. இருந்தாலும் தன் தவிப்பை அடக்கிக் கொள்ள வேண்டுமே!

''காக்டெயில் பார்ட்டி என்றால் என்ன?'' என்று கேட்டாள்.

''ட்ரிங்க்ஸ்... விஸ்கி, பிராண்டி, ஒயின், ரம், பீர்... எல்லாமாகச் சேர்த்து ஒரு மிக்சர்.''

அவளுக்குக் கசந்தது. பயமாகவும் இருந்தது. அவன் சிரித்தான்.

''சொன்னால் கேளுங்கள்... அந்த மாதிரி பார்ட்டிக்கு எல்லாம் நீங்கள் போகக் கூடாது.''

அவன் சிரிப்பை நிறுத்தவில்லை.

'' நான் சொன்னால் இப்படித்தான் சிரிப்பீர்கள்.... இதுவே உங்கள் மனைவி சொன்னால்....?''

''பைத்தியம்... பைத்தியம்... காக்டெயில் பார்ட்டியே என் வீட்டில்தான்... என் மனைவிதான் அனைவருக்கும் ஊற்றிக் கொடுப்பாள். அவள் உன்னைப் போல் அசடு இல்லை. பயந்தாங்கொள்ளி இல்லை. சரி... சரி... எல்லாரும் வீட்டுக்கு வந்து காத்திருப்பார்கள். ஐ மஸ்ட் கோ நௌ....''

வெளியில் கார் புறப்படுகிற சத்தம் கேட்டது. ஜெயராமன் போய்விட்டான்.

தனிமையில், அந்த வார்த்தை, அவள் செவிகளில் சுழன்றது.

உன்னைத் தொட்ட ராசி !

அவளைத் தொட்டவர்களுக்கு — இனியும் தொட இருப்பவர்களுக்கு — அவள் நிச்சயம் 'ராசி'யாகத்தான் இருப்பாள். ஆனால் அவர்களில் யாராவது ஒருவர் அவளுக்கு...?

என்ன செய்யலாம் ! அவளுடைய 'ராசி' அது!

# ஃப்யூராடான் உபயோகித்தால் அதிக நெல் விளைச்சல்

## டாடா ஃபைஸன் ராலீஸ் வழங்கும் புதிய ஃப்யூராடான் 3ஜீ மருந்து

**நெற்பயிரைத் தாக்கும் பூச்சிகளைக் கொல்லுகிறது. இது பயிர் முழுவதும் பரவி செயலாற்றுவதோடு, அதிக பச்சையான நெற்பயிரைத் தருகிறது; ஹெக்டேருக்கு மற்ற பூச்சிக் கொல்லிகள் தருவதை விட 3 மெட்ரிக் டன்னுக்கும் அதிகமாக விளைச்சல் தருகிறது.**

உலகெங்குமுள்ள நெற்பயிர் விளையும் பிரதேசங்களில் மிகச் சிறந்த பூச்சிக் கொல்லி என்று போற்றப் படுகிறது ஃப்யூராடான் 3ஜீ. இது பயிர் முழுவதும் பரவும் சுஞ்சியல்பு கொண்ட மருந்தாகும். இதை நிலத்திலும், நெல் வயலிலுள்ள நீரிலும் போட்டால் பயிர்கள் வேர்கள் மூலம் அதை உறிஞ்சி, பயிர் முழுவதும் பரப்புகின்றன. இதனால் பயிரைக் கடித்து மெல்லும், துளைக்கும் மற்றும் அதன் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளைக் கட்டுப் படுத்துகிறது.

உங்கள் நெற்பயிருக்கு சிக்கனமான புதிய முறை. அதாவது விதைகள் / நாற்றுக்களைத் தோய்த்து எடுக்கும் முறைப்பற்றி உங்கள் வியாபாரியைக் கேளுங்கள். அதை ஒருமுறை கையாண்டு பாருங்கள். வியப்பூட்டும் பலன்களைக் கண்டு நீங்கள் அதிசயிப்பீர்கள்.

வியாபார விவரங்களுக்கு எழுதுக:
**ராலீஸ் இந்தியா லிமிடெட்**
ஃபெர்டிலைஸர்ஸ் & பெஸ்டிஸைட்ஸ் டிவிஷன், 21, ரேவின் ஸ்ட்ரீட், பம்பாய் 1.

மற்ற இடங்கள்: சென்னை, கல்கத்தா, லக்னௌ.

**விசேஷ சிறப்பம்சங்கள்**
ஃப்யூராடான் 3ஜீ, மேலாகத் தூவப்படும் பூச்சிக்கொல்லிகளை விடச் சிறந்தது; விலையும் மலிவானது.

- நெற்பயிரைத் தாக்கும் தண்டு துளைப்பான், தத்துப் பூச்சி, ஆனைக்கொம்பன், அசுவினி, பேன் ஆகிய பெரும்பாலான பூச்சிகளைக் கட்டுப்படுத்துகிறது.
- விசேஷ கருவிகளின் உதவியின்றியே கையாலேயே இந்த மருந்தை எளிதில் பத்திரமாகப் போடலாம்.
- கடித்து மெல்லும் பூச்சிகளையும் சாற்றை உறிஞ்சும் பூச்சிகளையும் கட்டுப் படுத்துகிறது.
- பூச்சிகளை விரைவில் தாக்குவதற்காக பயிர் முழுவதும் உடனடியாகப் பரவி விடுகிறது.
- இதை மழை அடித்துச்செல்ல முடியாது... தேவைப்படும்வரை, நீண்ட காலம் பாதுகாப்புத் தருகிறது.
- தானிய மணியில் மருந்து தங்கவோ, காற்றடிக்கவோ செய்யாது.
- இந்தப் பயிரை அழிக்கும் பூச்சிகளை மட்டுமே பாதிக்கும்; பயிருக்கு சாதகமான பூச்சிகளுக்கு ஆபத்தல்ல.

INSECTICIDE
furadan
POISON

RALLIS
TATA FISON
PESTICIDES

fmc furadan®
IS A REGISTERED TRADEMARK OF FMC CORPORATION

PATENT NUMBER 97332 OF FMC CORPORATION

**அதிக நெல் விளைச்சல் பெற... ஃப்யூராடான் 3ஜீ**

OBM-3134 TAM

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# வெள்ளைத் துணிகள் பழுப்பேறுவானேன்?




## பழுப்புக்கு மூடுவிழா,
## வெளுப்புக்குத் திறப்பு விழா:
## புது **ரின்ஸோ** பவுடர்

சோப்புப் போடப் போட வெள்ளைத் துணிகள் பழுப்பேறி அழுதுவடிகிறது அல்லவா? <u>அதைத் தான்</u> அகற்றப் பிறந்தது ரின்ஸோ. டிட்டர்ஜெண்ட் சலவைக் கலையிலே ஒரு முன்னேற்றப் புத்தேடு. விழி திறந்த விடிவெள்ளி. உரித்தெடுத்த ஒளிவெண்மைக்கு:ரின்ஸோ. <u>ஒகோ என்னும் தரம்---வாகான விலையம்.</u>

## வெண்மை பளிச் சிட வெளுப்பது **ரின்ஸோ**

லின்டாஸ்-RINSO-1-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

